# ஸ்ரீ குமரகுருபரர்



சித்திரை 1 (14—4—82)

தொகுதி 1 பகுதி 7

உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.

சிறப்பாசிரியர்,

பேராசிரியர்

திரு அ. ச. ஞானசம்பந்தன், M. A., சென்னை-83

ஆசிரியர் குழு:-

திரு. கம்பன் அடிப்பொடி, காரைக்குடி

திரு. மு. அருணாசலம், M. A., திருச்சிற்றம்பலம்

திரு. கா. ம. வேங்கடராமையா, M. A., தஞ்சை

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், மதுரை

மகாவித்துவான்

திரு. சி. அருணைவடிவேல் முதலியார், அண்ணாமலைநகர்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., மதுரை

புலவர் திரு. கீரன், லால்குடி

டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கையா, M. A. Ph.D., மதுரை

திரு. து. சுந்தரமூர்த்தி, M. A., திருப்பனந்தாள்

திரு. பொ. முத்தரசு M. A., ஸ்ரீவைகுண்டம்

நிர்வாக ஆசிரியர்:-

டாக்டர் ம. வே. பசுபதி, D. Litt., திருப்பனந்தாள்

அட்டையில்:

திருநாவுக்கரசு சுவாமிகள்

திருவுருவம்

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடத்து அதிபர்
**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

உலகத்தில் போலிகள் அதிகம்; உலக மக்களுக்கு ஆணவம் அதைவிட அதிகம்.

ஒரு நற்செயல்-சாதனை நிகழ்ந்தது என்றால் நடந்து முடிந்த பிறகு 'இது என்னால்தான் நடந்தது' என்று சொல்லிக் கொள்ள அனேகம் பேர் வருவார்கள். சாமான்ய மானவர்கள் அதைத்தான் நம்புவார்கள். அந்தப்போலி களுக்கு ஏக மரியாதை நடக்கும். அந்தச் செயலுக்குச்-சாதனைக்கு - உண்மையான காரணன் யாரோ அவனை உலகம் அடையாளம் கண்டு கொள்வதே இல்லை.

உண்மையாகவே சாதனைகள் புரியக் கூடிய சாத்தியங் கள், சாமர்த்தியங்கள் உள்ளவன் முன்னும் பின்னுமாகத் தன்னை வெளிக்காட்டிக் கொள்வதே இல்லை. வெற்று ஆரவார உலகத்திற்கு வேண்டுமானால் அது பைத்தியக் காரத்தனமாக - பிழைக்கத் தெரியாத தனமாக இருந்து போகட்டும். ஆனால் அதுதான் சரியான மனிதக்குணம்.

ஒரு சத்தியத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். மனிதர்கள் யாரும், மனிதனுக்குத் தேவையானதைச்

செய்யும் சக்திபடைத்தவர்கள் அல்லர்; மனிதத் தேவைகள் கடவுளால் மட்டிலுமே பூர்த்தி செய்யப்பெறும். எல்லாம் கடவுள் இஷ்டப்படியே நடக்கும். மனிதன் துனைக்காரணம்

"என்செயலால் என்றும் யான்செய்வது இல்லை"

என்று உணரும் உணர்ச்சி வந்தால் எதற்கும் யாரும் காரணங்கள் அல்லர் என்பது தெளிவாகிவிடும். விருப்பு வெறுப்பு அற்றநிலை—சமநிலை—ஏற்படும்.

"என்செயலால் என்றும் யான்செய்வதில்லை"

என்று சொன்னால் சில பலத்த சந்தேகங்கள் படித்தவர்களுக்கும் வருவதுண்டு. தீய செயல்களுக்கும் நாம் பொறுப்பல்ல என்றல்லவா ஆகிறது. நாம் அவற்றிற்குப் பொறுப்பில்லாதபட்சத்தில் நமக்குத் தீவினை சேர்வது எப்படி? நல்வினைக்கும் நாம் பொறுப்பில்லை என்றால் நல்வினைப் பயனாகிய இன்பநுகர்ச்சி உண்டாவது எப்படி?

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது சற்றுச் சிக்கல் தான். எளிய அறிவுடையவர்கள் ஏற்றுக் கொள்ளும்படி யாகப் பதில் சொல்வது முடியாத காரியம். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் 'எனக்குப் புரியவில்லை; எனக்கு ஞானமில்லை' என்கிறார்கள். அப்பகுதி வருமாறு:

என்செயலால் ஒன்றும் யான்செய்வது இல்லை எனக்கு அவமே
புன்செயலாம் வினைப், போகம் உண் டாவதுஎன்? போதம் இல்லேன்

[அவம்—வீண்; புன்செயல்—அற்பகாரியம்; போகம்—இன்பம்; போதம்—ஞானம்]

இறைவனே ஆகிய குருநாதன் அளிக்க வருவதே இன்பங்கள்; செயல்கள்; வெற்றிகள். குருநாதனின் கருணை இருக்குமானால் புண்ணியம் இருந்தால்தான் இன்பம் விளையும் என்ற நியதி இல்லை.

'மாசிலாமணியாகிய குருஞான சம்பந்தரே! உன்செயலாலே நடக்கும் சாதனைகளை யெல்லாம் என் ஆணவம் என் செயலாகவே ஆக்கி விமரிசிக்கிறது' என்று ஸ்ரீ சுவாமிகள் வருந்தி உரைத்தருளுகிறார்கள்.

தன்செயல் ஆயஎல்லாம் மாசிலாமணிச் சம்பந்த! நின்
நன்செயல் ஆயினும் என்செயலாச் செய்யும்
நான் என்பதே!

[தன்செயல்-உன்னுடைய செயல்; நல்லசெயல்-சாதனை; நான்-ஆணவம்.]

ஸ்ரீ சுவாமிகள் 'என் செயலால் ஒன்றும் யான் செய்வதில்லை' என்று ஞான உணர்வுததும்பத் தொடங்கித் தன்னடக்க உணர்வு உந்தப் 'போதமில்லேன்' என உரைத்து ஆணவத்தைத் தன்னின் வேருயதாக, — அறிவு உணர்வின் முடிபாக அறிவித்திருக்கும் சிறப்பை இப் பாடலால் உணர்ந்து இன்புறுதல் பொருந்தும்.

—சிவ சிவ



## திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

தஞ்சைத் தரணியில் குடந்தைக்கு அண்மையில் உள்ள திருநாகேச்சரம் பாடல் பெற்ற திருத்தலமாகும். இது சேக்கிழார் திருவடி ஞானம் பெற்றதலம்; இப்பதியில் உள்ள அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில் இராசகோபுரமும், கட்ட கோபுரமும் தெய்விக சிந்தனையுடைய அன்பர்களின் கூட்டுணர்வின் வழியாக அரசு மானியத்துடன் திருப்பணி செய்யப் பெற்று வருகின்றன. பங்குனித் திங்களில் குடமுழுக்கு நிகழவிருக்கிறது. ஆத்திக அன்பர்கள் இயன்ற அளவில் காணிக்கையளிப்பார்களாக!

அனுப்ப வேண்டிய முகவரி:-

செயல் அலுவலர்,
ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்சரம்.

# ஸ்ரீ ஏகாம்பரநாதர் பதிற்றுப்பத்தந்தாதி

## காப்பு.

எண்ணிய கருமம் முடித்திடுங் கச்சி ஏகம்ப வாணர்தம் மீது
பண்ணிய தமிழாற் பதிற்றுப்பத் தாகப் பகருமந் தாதிக்குத் துணையாய்
நண்ணிய விகட நடமிடு மிக்கு நயந்திடு மாழியை யுதவும்
புண்ணிய விகடச் சக்கரக் களிற்றின் பொலங்கிள ரடிமுடிக் கணிவாம்

## நூல்.

இமயமால் வரைசெய் தவப்பயன் தன்னால்
ஈன்றருள் காமக்கோட்டத்தின்
உமையவள் பூசைக் குகந்திடுங் கச்சி
ஒற்றைமா மூலத்தி னுறைவோர்
தமையடி வழுத்தி யனுதினம் பணிவார்
தமக்கொரு குறையுமின்றருளால்
அமையுமெய்ப் பொருளு மெய்ப் பொருளுணர்வும்
அவர்க்கலா தெவர்க்குள தாமே. 1

உள்ளதாம் பொழுதே தருமங்கள் புரியா(து)
உலோபமே கைக்கொளுஞ் சிறியோர்
பின்னையாப் பிறந்தும் பயனிலா தொழியிற்
பிறிதொரு துணையவர்க்குளதா
கள்ளமே புரியுங் கம்பமா நதியாய்
கர்த்தனே யடிமையைக் காக்கும்
தெள்ளுநீர் வேணிச் சிவபெரு மானே
திகைத்தனன் தேற்றலுன்கடனே; 2

கடந்தனன் பிறப்பை யென்பதூஉ மில்லை
காயத்தை யொறுத்தொறுத்துலவா
மடந்தனை ஒழித்தேன் என்பதூஉ மில்லை
மடமயி லியலினு ரெல்லாம்
விடந்தலைக் கொளலான் மயங்கினே னெடுநாள்
வீடுபே றுனது முளதோ
இடந்தருங் கச்சிக் காமக்கோட் டத்தின்
இறைவிசே ரிடப்புறத் தானே. 3

புறம்பெனக் போக்கல் தருமமோ அடியேன்
பொய்ம்மையே பெருக்கி நாடோறும்
மறம்பல புரிந்தேன் மலவலி யதனல்
மற்று முன்திருவுள மறியேன்
பறந்தகழ்ந் தறியா அரியயன் முதலோர்
பணிந்திடு கச்சியே கம்பா
சிறந்தநின் புகழைச் செப்புதற் கென்னே
செய்தனன் றவமிஃ தரிதே. 4

அரியையு நீயே அறியையும் நீயே
ஆனந்தமாய்த் தொழு வோர்க்கு
பெரியையு நீயே சிறியையு நீயே
பிதாமகன் முதலினேர் காணுக்
கரியுரி போர்க்குங் கடவுளே கச்சிக்
கம்பனே யெம் பெருமானே
வரியுரி யுடுக்கும் வண்ணம்யான் காண
வந்தருள் புரிவதெந்நாளே; 5

நாளினை யெண்ணி நடுவன்நத் துற்றல்
நான்செயும் செய்கையு முளதோ
கோளினை யெண்ணி நரகத்தி லிட்டுக்
குமைத்திடி லெனைப்பயந் தெடுத்த
கேளிரா லெண்ணுங் கதியவந் தருளிக்
கேவலந் தனிற்கிட வாமல்
ஆளுநீ யையா கச்சிக்கா மாட்சிக்
கன்பின்மா வடியுதித் தவனே. 6

உதித்திலை நீமற் றுதிப்பவர்க் கெல்லாம்
உறைவிட மாகியென் றனைவு
மதித்தனை யதனு லுன்னனையே நம்பி
மர்க்கடப் பிடியெனப் பிடித்தேன்
கொதித்திடு மழுவை அங்கையிற் பிடித்த
குழகனே பழுதில்நான் மறையும்
விதித்திடுங் கச்சி மாநிழ லுறையும்
விமலனே வேதநா யகனே; 7

வேதமுள் குறையுஞ் சோதிநீ யுன்னை
வேதமு முணர்வதற் கரிதே
நாதமுள் குறையும் நாதநீ யுன்னை
நாதமு மறிந்திடற் கெளிதோ

போதமுள் ளுறையுந் தும்புரு முதலோர்
புகழ்தரு மிசைகொள்செஞ் செவியோய்
பாதமுள் ளுறையு படிஎனக் கருளாய்
பரமனே கச்சிவாழ் முதலே. 8

முதல்நடு அந்தம் ஆகியே நின்ற
மூர்த்தியே முத்தொழில் நடத்தும்
விதமுனக் கிதோ நவேந்திர பேதம்
வேறல்ல வே;தெரி வோர்க்குப்
பதமருள் கச்சி ஏகம்ப வாறு
பற்றினேன் பற்றறுத் துய்யும்
இதமெனக் கருளி எங்குநீ யான
இயல்பினைத் தெரியச்செய் வாயே.

வாயினாற் றுதித்து மனத்தினால் நினைத்து
வழிபடு மடியவர்க் கன்றோ
நீயுமுன் நிற்பாய் அடியனேற் கெந்த
நீர்மையால் நீபகிழ்ந் தருள்வாய்
பேயனேன் ஆசைப் பட்டதும் உண்டு
பிணங்கினால் வருபய னெவனோ
தாயின்நேர் கச்சிக் கம்பனே காக்குந்
தலைவனே மலைகொள்வில் லானே.

(வேறு)

வில்லாய்க் கரும்பை வளைக்குமந்தவேலை வேளை விழித்தெரித்து
நல்லா ரோடு மணம் புணர்ந்த நரைவெள் விடையாய் கச்சிநகர்
அல்லார் கண்டா ஏகம்பா அண்ணா அண்ணா வடியேனை
கல்லாப் புல்லன் எனவன்றோ கட்டாய் கையும் விட்டாயே;

கைகால் விட்டுப் பஞ்சடைந்து கண்கள் மூடிக் கலங்கிமன
கைம்மே லுந்தி எழும்பொழுதில் அஞ்சே லஞ்சே லென்றருளி
வையார் சூலப் படைஏந்தி வந்தாட் கொண்டா லாகாதோ
ஐயா கச்சிப் பதிக்கப்பா அப்பா ஒப்பி லாமணியே. 12

ஒப்பு மில்லை உவமமில்லை உலகம் புகழு மறைதனக்குச்
செப்பு மில்லை யப்பாலுக் கப்பா லான சிவமன்றோ
மூப்பு வனங்கள் தொழுகச்சி மூதூ ரதனில் முளைத்தின்ற
அப்பன் அனையு மாயிருந்த அண்ணல் ஏகாம் பரத்தானே; 13

ஏகாம் பரத்துக் கிணையுண்டோ எவர்க்கும் பத்தி தருவதிலே
ஏகாம் பரத்துக் கிணையுண்டோ எவர்க்கு மூத்தி தருவதிலே
ஏகாம்பரத்துக் கிணையுண்டோ எவர்க்கும் இன்பந் தருவதிலே
ஏகாம் பரத்துக் கிணையுண்டோ எங்கு நிறைந்த பரம்பொருளே. 14

பொருளைக் குறிக்கும் புல்லறிவைப் போக்கிக் கெடாமல் உனதுதிரு
வருளைக் குறிக்கு நல்லறிவை அளித்தா லதனுற் குறையாமோ
மருளைக் குறிக்கு மனத்தாருக் கெட்டா மறையின் முடிவான
தெருளைக் குறிக்குஞ் சிவக்கொழுந்தே திருவே கம்பத் தெம்மானே.

ஆனே றேறிக் கச்சிநகர் அணியார் வீதிப் போந்தருளி
வானோர் மண்ணோர் பணிந்தேத்த மாவின் நிழற்கீ ழமர்ந்தருளுந்
தேனார் கொன்றைச் சடைமவுலிச் சிவனென் பெருமான்
தனைத்தொழுதேன்
யானே இறவேன் இறந்துமினிப் பிறவேன் இறுதிக் காலையுமே. 16

காலை நுகர்ந்து புனலருந்திக் காய்ந்த சருகு தனைப்புசித்துக்
கோலையுகந்து குண்டிகையுங் கையிற் பிடித்துக் குழைநெஞ்சர்
ஆலயங்கள் எவற்றினுக்கும் அழகார் கச்சி நகரடைந்தால்
மேலை வினைக்கு விடைகொடுத்து மெய்வீட் டின்பம் பெறலாமே. 17

பெறுதற் கரிய உருவிதனைப் பெற்றும் பயனில் பொழுதாக்கி
உறுநற் பயனை உருநெஞ்சே உமையாள் பூசை கொண்டுகந்து
மறுவற் றொளிருந் திருமேனி வள்ள லாரை வணங்காயேல்
இறுதிப் பொழுதில் எமபடருக் கென்னே சொல்லத் துணிந்தாயே. 18

துணிந்தாய் தீமை வினையுரியத் துட்ட ரோடும் உறவாடிப்
பணிந்தாய் அவரை இன்னமின்னம் பரிவுற் றுழலு மடமனனே
அணிந்தார் கொன்றைத் தொடைமவுலி அண்ண லேகாம் பரநாதர்
தணிந்தா ரன்றே பெருங்கோபந் தக்கன் மகத்தை அழித்தாரே. 19

அழியா வரந்தந் தருள்வானை அடியார்க் கெளிய னுவானை
ஒழியா மலமூன் றெறுத்தானை உவந்தார்க் கருளு முண்மையனை
விழியால் மதனை எரித்தானை விளங்கும் ஏகாம் பரத்தானை
மொழியாய் மனனே யழலினிடு மெழுகாய் வினையு முடிந்திடவே. 20

(வேறு)

முடியை யானறிந் தெய்துவ லெனவரு முண்டகா சனத்தோனும்
அடியை யானுணர்ந் துறுவலென் றிகல்கொளும் அரியுமுன்
னறிவொண்ணுய்
பொடியை யார்திரு மேனிய எழிற்பொழிற் கச்சியம் பதிவானு
கொடிய நானுறு துர்வினை அறிவுறல் கூடுமோ கூடாதே. 21

உ

சிவ சிவ

# சுசீந்திரம்

# ஸ்ரீ தாணுமாலய சுவாமி

## தேவஸ்தானத்தில்

## சித்திரைத் திருவிழா தேவார கோஷ்டி

கன்னியாகுமரி ஆச்சிராமம் திருப்பனந்தாள் திருமுறை அன்னம் பாலிப்பு வகையரு நிதியின்படி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

**1—5—82 முதல் 3—5—82 முடிய**

திருவாவடுதுறை,

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்,

திரு. T. M. சிவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,

(தக்க பக்க வாத்தியங்களுடன்)

ஆணைப்படி,

ஆச்சிராமம்
14—4—82

பா. கனகசபாபதி பிள்ளை,
ஏஜண்டு. ஸ்ரீ காசி மடம்,
ஆச்சிராமம்.



# மும்மூர்த்திகளும் ஆனவர்



வாகீச கலாநிதி. கி. வா. ஜகந்நாதன்

தியாகேசப் பெருமான் பிரம்மா விஷ்ணு உருத்திரன் என்னும் மூன்று மூர்த்திகளுமாக இருக்கிறார் என்பதைச் சொல்ல வருகிறார் குமரகுருபரர். சிலேடை நயம்பெற அக்கருத்தைச் சொல்கிறார்.

திருவாரூர் பூமிதேவியின் இதய கமலமாக இருப்பது. அங்கே சிவ பெருமான் எழுந்தருளியிருக்கிறார்.

பூமாதின் இதய கமலத்து வைகும்
பொலிவானும்

ஒரு கமலத்தில் தங்குகின்ற சிறப்பினால் கமல யோனியாகிய பிரமதேவனாக இருக்கிறார். கமலத்தில் வைக்கும் பொலிவு அதனைக் குறிப்பிக்கிறது.

தியாகப் பெருமான் சிங்காதனத்தில் வீற்றிருந்து அரசாட்சி செய்தார். அவரைப் பாற்கடல் ஈன்ற திருமகள் வழிபட்டாள். அதனால் இந்தத் தலத்துக்குக் கமலாலயம் என்ற திருநாமம் உண்டாயிற்று.

அரியணைமேல் புணரி ஈன்ற
மாமாது வீற்றிருத்த லானும்.

[புணரி-கடல்; மாமாது-திருமகளாகிய மங்கை.]

திருமகள் தம் மார்பில் வீற்றிருக்கப் பெற்றவர் திருமால். அவன் வழி வீற்றிருத்தலால் தியாகேசர் திருமாலைப் போல விளங்குகிறார். அவர் சிவபெருமானாகவே என்றும் ஒளிர்கிறார். அதை விளக்கமாக எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. ஆகவே அவர் மும்மூர்த்திகளுமாக இருக்கிறார்.

அவருடைய இயல்பான நிலை யாது? வேதத்தின் தொடக்கத்திலும், இடையிலும், இறுதியிலும் அவர் இருக்கிறார். மறையின் முடிவாகிய உபநிடதங்களால் போற்றப் பெற்று அவற்றின் பொருளாக உள்ளவர் அவர். மறை முடிவில் நின்ற தாமே அதன் முதலில் நின்ற பிரமனாகவும் நடுவில் நின்ற திருமாலாகவும் ஆகியிருக்கிறார். இதனை மேலே சொன்ன காரணங்களால் அவர் தெளிவுபடுத்திக்கொண்டு விளங்குகிறார்.

மறைமுதலும் நடுமுதலும் முடிவில்
நின்ற
தாம் ஆதல் தெளிவிப்பார் போலும்;
[போலும்: அசை.]

இவ்வாறு தெளிவிக்கும் பெருமான் அம்பிகையின் காதலுக்கு

உரியவர்; கடல் சூழ்ந்த ஞாலம் முழுவதையும் பெருமாட்டி அன்பினால் மனம் குழையச் செய்தவர்; அவருடைய காதலைக் கண்டு தாமும் மனம் குழையத் திருமேனி குழைய நின்றவர்.

நீலத்
தரங்கநெடும் கடல் ஞாலம் ஒருங்கு
வாய்த்த
கோமாது மனம் குழையக் குழைந்த.

அவர் என்றும் மாருத இளமையை உடைய குழகர். திருவடியிலே கிண்கிணி பூண்டிருப்பதனுலும் பேரழகுடையவராக இருப்பதனுலும் அவரைக் கிண்கிணிக் கால் அழகனுர் என்ற திருநாமத்தால் ஆன்ருேர்கள் குறிப்பிடுவர்.

ஆரூர்க்
குழகனுர், கிண்கிணிக்கால் அழகனுரே

திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தியாகேசப் பெருமான் இவ்வாறு மும்மூர்த்திகளாகவும் விளங்குவதனுல் அவரைத் தரிசித்தவர்கள் மும்மூர்த்திகளையும் ஒருங்கே தரிசித்த பயனைப் பெறுவார்கள். தனித்தனியே பிரமனையும், திருமாலையும், சிவபெருமானையும் தரிசிக்க வேண்டிய அவசியம் இல்லை. தியாகேசரைத் தரிசித்தாலே போதும். மும்மூர்த்திகளையும் தரிசித்த பேற்றை அடைவார்கள்.

பூமாதின் இதயகம லத்து வைகும்
பொலிவாலும், அரியணைமேல் புணரி
ஈன்ற
மாமாது வழிபடவீற் றிருத்த லானும்
மறைமுதலும் நடுமுதலும் முடிவில்
நின்ற
தாம்ஆதல் தெரிவிப்பார் போலும், நீலத்
தரங்க நெடும் கடல்ஞாலம் ஒருங்கு
வாய்த்த
கோமாது மனம்குழையக் குழைந்த
ஆரூர்க்
குழகனுர், கிண்கிணிக் கால் அழக
னுரே.

நீலநிறமும் அலைகளும் உடைய ஆழமான கடல் புடை சூழ்ந்த உலகம் முழுவதையும் ஒருங்கு ஈன்ற தலைமை பெற்ற மங்கையாகிய உமாதேவி காதலால் மனம் உருக, அந்தக் காதல்கண்டு தாமும் நெஞ்சம் உருகியவராகிய திருவாரூரில் உள்ள இளமையை உடையவரும், கிண்கிணிக்கால் அழகனுரும் ஆகிய தியாகேசப் பெருமான், நிலமகளின் இதய கமலமாகிய திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தோற்றப் பொலிவினுலும் (தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் கலைமகளின் இதய கமலத்தில் தங்கும் பொலிவினுலும்), சிங்காதனத்தின் மேல் விளங்குபவளும் கடல் ஈன்ற திருமகளாகிய மங்கை வழிபட எழுந்தருளியிருத்தலாலும் (திருமகளாகிய மங்கை மார்பிலிருந்து வழிபட எழுந்தருளியிருப்பதனுலும்) வேதத்தின் முதலில் உள்ள பிரமனும், நடுவில் நின்ற திருமாலும் அதன் முடிவாகிய உபநிடதத்தில் நின்ற தாமே ஆதலைத் தெரிய வைப்பார்.

['பூமாது-பூமியாகிய மங்கை, தாமரை மலரில் எழுந்தருளியிருக்கும் மங்கையாகிய திருமகள். இதயகமலம் - திருவாரூர், இதயமாகிய கமலம். பொலிவு-தோறப் பொலிவு. அரிஅணை - சிங்காதனம். புணரி - பாற்கடல். மாமாது - திருமகளாகிய மங்கை. வீற்றிருத்தலாலும் - தாம் எழுந்தருளி யிருப்பதாலும். திருமார்பில் இருப்பதாலும். மறைமுதல், நடுமுதல்: மும்மூர்த்திகளையும் மும்முதல் என்பது வழக்காதலின் இவ்வாறு கூறுவர்; ''மும்முதற் கடவுளும் அடித்தொழும் பாற்ற'' என்று முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில் இவ்வாசிரியரே கூறுகிறார். போலும்: அசை; போல்வர் என்று பொருள் செய்தல் பொருந்தாது அது அப்போது ஒருமை யாகும் தரங்கம்-அலை, நெடுங்கடல்-ஆழமான கடல்; '' நெடுங் கடலும் தன்னீர்மை குன்றும்'' (குறள்.) வாய்த்தவயிறு வாய்த்த- கருவுற்று ஈன்ற. கோமாது-தலைமையை உடைய பிராட்டி; மூன்று மூர்த்திகளின் தேவிமார்களில் தனித்தலைமை பெற்றவளாதலின் இவ்வாறு சொன்னார்; அரசுரிமை பெற்ற தேவி எனலும் ஆம்; இராஜராஜேசுவரி என்ற திருநாமத்தை உடையவள் என்பதை நினைந்து சொன்னபடி; 'மகாராஜ்ஞீ' என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று, மனம் குழைய, அன்பினால் மனம் உருக. குழைந்த-தாமும் உருகிய. காஞ்சிபுரத்தில் அம்பிகை தழுவ இறைவன் குழைந்ததை எண்ணிச் சொன்னதாகவும் கொள்ளலாம். கிண்கிணிக்கால் அழகனார்; தியாகப் பெருமானின் திருநாமங்களில் ஒன்று, ''கிண கிணியாக் கோத்துச் சாத்த'' (16) என்று முன்பு சொன்னார். ஏகாரம் ஈற்றசை.]

இது திருவாரூர் நான்மணி மாலையில் வரும் 20 ஆவது பாட்டு.

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### ஆஸ்த்மா நோய்க்கு

1: ஆஸ்த்மா நோயில் இழுப்பு அதிகம் ஏற்படும்போது வெள்ளைப் பூண்டை நன்றாக நசுக்கி முகர்ந்தால் இழுப்பு நிற்கும்.

### வயிற்றுப் போக்கு, சீதபேதிக்கு

2. ஆப்பிள் பழத்தை ஆவியில் வேக வைத்து அத்துடன் தேனும் கலந்து அருந்த, வயிற்றுப் போக்கு, சீதபேதி குணமாகும்.

### கண் பார்வை நன்கு பெற

3. பொன்னாங் கண்ணிக் கீரையை உணவில் அடிக்கடி சேர்த்து வருவதால் மிகவும் நல்ல பார்வையைப்பெறலாம்.

Dr. N. சடையப்பன் S. M. P.

# நாம் நல்லவர்களாவோம்

## மகாவித்துவான் தண்டபாணி தேசிகர்

முக்கியமாக நமக்கு இரண்டு விதங்களில் கோபம் வருகிறது. ஒருவன் தப்புக்காரியம் செய்தால் அவனிடம் கோபம் வருகிறது. அல்லது அவன் நம்மைத் தூஷித்தால் அவனிடம் கோபம் வருகிறது. யோசித்துப்பார்த்தால் இந்த இரண்டுவிதங்களிலும் எவரிடமும் கோபம் சொள்வதற்கு நமக்கு யோக்கியதை இல்லை என்று தெரியவரும்.

1. ஒருவன் தப்புப்பண்ணுகிறான் என்றால் கோபிக்கிறோம், அப்படியானால் நாம் தப்புப்பண்ணாதவர்களா? ஒருவன் பாபி என்று நம்மை தூஷிக்கிறான். நாம் அந்தபாவத்தைப் பண்ணாதவர்களா? என்று நினைக்க வேண்டும். நாம் செய்கின்றதவறுகளைத்திருத்திக்கொள்ள எத்தனையோ பாடுபட வேண்டியிருக்கிறது. நாம் கோபிப்பதினால் நமக்கே தீங்கு செய்து கொள்ளுகிறோம். பெரும்பாலும் ஆத்திரத்தில் நாமே நம் சரீரம் மனது இரண்டையும் கெடுத்துக் கொள்வதோடு முடிகிறது. ஆகையால் அன்பாய் இருப்பதால் மனிதனுடையதன்மை மிளிர்கிறது. அது தான் ஆனந்தம்; அன்பேஆனந்தம். அன்பே சிவம்.

2. மனிதப்பிறவி எடுத்ததின் பயன் அன்பு செலுத்துவதுதான். அன்பு செலுத்தும்போது துன்பமேதெரிவதில்லை. ஈஸ்வரரிடமும் ஸாதுக்களிடமும் இந்த அன்பை அப்பியசிக்க ஆரம்பித்து, கொஞ்சம் கொஞ்சமாகச் சகல ஜீவராசிகளிடத்திலும் விஸ்தரிக்க வேண்டும். இதுவே ஜன்மா எடுத்ததின் பயன்.

3. வள, வள வென்று பேசாமல் சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்று பழகிக் கொண்டால் புத்தியில் ஒரு திட்சண்யமும் வாக்கில் ஒரு பிரகாசமும் கூட உண்டாகும். அதனால் நமது சக்தியும் வீண் ஆகாமலிருக்கும்.

4) எல்லாவற்றையும் விட முக்கியம் எண்ணத்தில் கணக்காகயிருப்பது. எண்ணத்தை நெறி கெட்டுப்போக விடாமல் கவனமாகயிருப்பது எத்தனைகஷ்டப்பட்டாலும் கொஞ்சம் கொஞ்சமாக, பிரயத்தனம்பண்ணிஇந்தஎண்ண

ஒட்டத்திற்கு அணைபோட்டே ஆக வேண்டும். கூடிய வரையில் சத்விஷயத்தில்நாட்டம் கொண்டிருக்க வேண்டும். சித்தம், சிதறச்சிதற அத் தனைக்கத்தனை அதற்குப்பலக் குறைவு. அதனை அணை போட்டு நல்ல விஷயங்களில் மட்டும் அதைத் திருப்பிவிட்டால் அது பெரும்சக்தியுடனும் உத்தம மான பிரயோஜனங்களையுண் டாக்கும். அவசியமில்லாத எண்ணங்களில்மனதை ஓடவிட்டு கொண்டேயிராமல் இறைவன் பால் மனதை நினைத்துக் கொண்டே வந்தால் அது நாள டைவில் ஒடுங்கிவிடும்.

5 இறைவனிடம்மனத்தைஎப்படிச் செலுத்துவது என்ற கேள்வி எழக்கூடும். இறைவனுடைய கல்யாண குணங்களை நினைப்பது அவனுடைய நாட்களை இடை விடாமல் உச்சரிப்பது அவனுக்குத் தொண்டு செய்வது அவனைப் புகழ்ந்து பாடுவது முதலியது செய்து வருவோமானால் நாம் இந்த மனத்தை அடக்க வழி செய்தவர்கள் ஆவோம்.

6. இது அவசியம். இது அநாவசி யம். இது நல்லது இது கெட்டது இது மெய்;இது பொய் என்று கணக்குப்பண்ணித் தள்ளுவதைத் தள்ளி எடுத்துக் கொள்ள வேண் டியதைக்கொண்டாலன்றி ஈசுவர தத்துவத்தைக் காணமுடியாது: அதாவது அனுபவபூர்வமாக உணரமுடியாது.

குறள் ।— கணக்கறிந்தார்க்கன்றி
காண வொண்ணுதது
கணக்கறிந் தார்க்கன்றிக் கை
கூடாக் காட்சி)

7. பகவான் தந்திருக்கும் புத்தி யால்,வாக்கால் பிறருக்கோ, 'தனக்கோ, கெடுதல் உண்டாக் காமல் எவ்வளவோ நல்லது செய்யலாம். பாபமும், துக்கமும், பயமும் நீங்க வாக்கைப்பயன் படுத்தலாம். ஆக இதற்கெல்லாம் அடிப்படை பக்தி,வாக்கு, தெய்வ சம்பந்தமாகப் பயனுறவேண்டும்.

8. நல்லமனதுயிருந்தால் தான், சிலம் வரும். கெட்ட எண்ணம் மனதில் புகாதபடி நல்லதே உள் ளம் முழுவதும் நிரப்பியிருந்தால் தான் சிலம் வரும் கர்மானுஷ்டா னங்களைப்பண்ணுகின்ற போதும் நாம் பண்ணுகிருேம் என்ற அகம் பாவத்தோடு பண்ணக்கூடாது; கர்மா நுஷ்டானம் 'பண்ணக்கூடிய சக்தியைப் பகவான் கொடுத்தார் அதைச் செய்ய வேண்டும் என்ற புத்தியையும் அவர் கொடுத்தார் என்று நினைத்து ஈஸ்வரார்ப்பண மாகப் பண்ணவேண்டும். துளி அகம்பாவம் வந்தால் போச்சு. ஆனல் கொஞ்சம்கூட ஆங்காரம் இருந்தாலும் கெடுத்துவிடும்.

9. ஈஸ்வரன் என்றவுடனே அவரிடம் கெட்ட குணம் ஏதுமே

இருக்காது. அவரிடம் அழகு, கருணை, சக்தி, ஞானம் எல்லாவற்றிலும் பூரணமாக ஒன்று உண்டுஎன்றால் அதுவே ஈஸ்வரன் தான். மனோதத்துவப்படி நாம் எதை நினைத்துக்கொண்டிருக்கிறோமோ அதுவே ஆகிறோம். ஈஸ்வர கல்யாண குணங்களையே எண்ணுவதால் நம்மிடமுள்ளன நீங்கி நாம் நல்லவர்களாகிறோம்;

பற்று:

1. பற்றற்றுச் செய்கின்ற செயல் ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறது. மனத்தது அமைதி மேலும் மேலும் அமைகிறது. பற்றற்றுச் செய்கின்ற செயல் ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறது. பற்றற்றுப் பணிவிடை புரிகின்றவன் அருள் நிலைக்கு அருகதை உடையவனாகின்றான். பிற நலத்திற்சென்றே வாழ்பவனே பெருவாழ்வு வாழ்கிறான். பெருவாழ்வு மெய்யறிவை வளர்க்கின்றது. பெருவாழ்வு வாழ்கின்றவனுக்குதான் தூய அன்பும் உள்ளத்தில் உரு எடுக்கிறது. பெருவாழ்வும் பேறறிவும், பேர் அன்பும், இணைபிரியாதது.

கடவுள் மெய்யன்பின்சொரூபம் அன்பே கடவுள் கோட்பாடு. அவரிடத்தும் பற்றுதல் சிறிதேனும் இல்லை யாதலால் அவர் அன்பு சொரூபமாய் இருக்கிறார். மெய்யுணர்வு உதிக்குங்கால் பற்றுதல் தானே அகன்று விடுகிறது. பற்றற்ற நிலையைப் பெறுதற்கு ஒருவன் ஆயுட்காலம் முழுவதும் முயன்றாக வேண்டும்; எவன் ஒருவன் பற்றற்ற நிலையை அடைந்து விடுகின்றானோ, அவன் அன்பு நிலையை அடைந்தவன் ஆகிறான். அதே வேளையில் பந்த பாசங்களிலிருந்து முத்தி அடைந்தவன் ஆகிறான்.

காமியப் பிரார்த்தனை என்பது பலன் வேண்டிப் பிரார்த்தனை செய்வது. உலகில் பற்றுடையவர்கள் காமிய பிரார்த்தனையைத் தான் செய்வார்கள். செல்வம் வேண்டும், ஆயுள், ஆரோக்கியம் வேண்டும். இப்படி உலகப்பற்று உடையவர்கள் கடவுளிடம் பிராத்திப்பது வழக்கம். அப்படி பிராத்தனைபண்ணுவதால் அந்தப் பிராத்தனைகளுக்கு எல்லாம் கடவுள் செவிசாய்க்கிறார் என்று உண்மையல்ல;ஜீவனுக்குஇவ்வுலக வாழ்க்கையிலே எத்தருணத்தில் எது தேவையோ அதை மட்டும் கடவுள் கொடுத்தருள்கிறார். மனிதன் வேண்டியதையெல்லாம் கொடுப்பதில்லை; வேண்டியது ஒன்றைக் கடவுள் கொடுத்தருளாது போய் விட்டால் இறுதியில் அதுவும் தன்னுடைய நன்மைக்கென்றே மனம் தெளிந்திருப்பது கடவுள் நம்பிக்கை வைத்திருப்பவர்களுடைய கடமையாகும். பிரார்த்தனைகள் எல்லாம் அமைதியாகவும் ஆடம்பரமின்றியும் தன் மனத்திற்குள்ளேயே செய்து கொண்டால் போதும். அதைக் கடவுள் அறிகிறார் என்று ஆன்றோர்கள் அனைவரும் பகர்ந்திருக்கின்றனர். (வளரும்)

# ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடை அளித்த அன்பர்கள் விபரம்

8—2—82 வரை கூடுதல் 13,681—10

| | | |
|---|---|---|
| 1. | திரு. தி. அ. மாரிமுத்து திருச்சங்கோடு சிவனடியார் திருக்கூட்ட அன்பர். | 20—00 |
| 2. | திரு. S. அருணாசலம் செட்டியார் குடந்தை | 111—00 |
| 3. | ,, தா. ம. வெள்ளைவாரணம் திருப்பனந்தாள் | 10—00 |
| 4. | ,, S. R. வெங்கட்ராம் அடையார் சென்னை | 5—00 |
| 5. | ,, துர்க்கா குடில் அப்பு குடந்தை | 5—00 |
| 6. | ,, சு. சுந்தரசாமி ஆவல் சின்னம்பாளையம் | 11—00 |
| 7. | ,, சு. சின்னுசாமி ஆவல் சின்னம்பாளையம் | 10—00 |
| 8. | ,, டி. எஸ். வெங்கிடுசாமிக் கவுண்டர் தளவாய்ப்பாளையம் | 10—00 |
| 9. | ,, கா. பழநிக் கவுண்டர் சிக்கானூர் | 10—00 |
| 10. | ,, க. நடராஜக் கவுண்டர் வீரல்பட்டி | 10—00 |
| 11. | ,, செ. ராமசாமி கவுண்டர் குறிஞ்சேரி | 10—00 |
| 12. | ,, A. S. நடராஜன் கணியூர் | 10—00 |
| 13. | ,, V. பாலசுப்ரமணியம் வேடப்பட்டி | 10—00 |
| 14. | ,, க. சுப்ரமணியம் வேடப்பட்டி | 10—00 |
| 15. | ,, கு. காளியம்மாள் கோவை | 10—00 |
| 16. | ,, இரா. திருமாத்தாள் அர்த்தனாதிபாளையம் | 10—00 |
| 17. | ,, சு. நண்டாத்தாள் ஆவல்சின்னம்பாளையம் | 10—00 |
| 18. | ,, க. இராகாத்தான் K. மலையாண்டிபட்டணம் | 10—00 |
| 19. | ,, தி. அ. மாரிமுத்து திருச்சங்கோடு | 20—00 |
| 20. | ,, S. R. வெங்கட்ராம் அடையார் சென்னை | 5—00 |
| 21. | ,, S. பாபாகான் சிர்காழி | 3—00 |
| 22. | ,, துர்க்கா குடில் அப்பு | 5—00 |

3—4—82 வரை கூடுதல் 13,996—10

# திருக்கணித பஞ்சாங்கம்

திரு. கி. நாராயணசாமி, கடலூர். 1

துந்துபி ஸ்ரீ சித்திரை மீ (1982 ஏப்ரல் — மே)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலவ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (14—4—82) | புதன் | சஷ்டி 26-34 | மூலம் 27-02 |
| 2 | (15—4—82) | வியாழன் | சப்தமி 29-04 | பூராடம்முழுவதும் |
| 3 | (16—4—82) | வெள்ளி | அஷ்டமி முழுதும் | ,, 6-03 |
| 4 | (17—4—82) | சனி | ,, 7-13 | உத்திராடம் 8-44 |
| 5 | (18—4—82) | ஞாயிறு | நவமி 8-45 | திருஓணம் 10-46 |
| 6 | (19—4—82) | திங்கள் | தசமி 9-32 | அவிட்டம் 12-05 |
| 7 | (20—4—82) | செவ்வாய் | ஏகாதசி 9-29 | சதயம் 12-36 |
| 8 | (21—4—82) | புதன் | துவாதசி 8-36 | பூரட்டாதி 12-19 |
| 9 | (22—4—82) | வியாழன் | திரயோதசி 6-58<br>சதுர்த்தசி 28-43 | உத்திரட்டாதி 11-18 |
| 10 | (23—4—82) | வெள்ளி | ● அமாவாசை 25-59 | ரேவதி 9-41 |
| 11 | (24—4—82) | சனி | பிரதமை 22-56 | அசுவனி 7-39<br>பரணி 29-20 |
| 12 | (25—4—82) | ஞாயிறு | துதியை 19-45 | கார்த்திகை 26-56 |
| 13 | (26—4—82) | திங்கள் | திரிதியை 16-35 | ரோகிணி 12-36 |
| 14 | (27—4—82) | செவ்வாய் | சதுர்த்தி 13-34 | மிருகசீரிஷம் 22-28 |
| 15 | (28—4—82) | புதன் | பஞ்சமி 10-49 | திருஆதிரை 20-38 |
| 16 | (29—4—82) | வியாழன் | சஷ்டி 8-25 | புனர்பூசம் 19-12 |
| 17 | (30—4—82) | வெள்ளி | சப்தமி 6-27<br>அஷ்டமி 28-55 | பூசம் 18-11 |
| 18 | (1—5—82) | சனி | நவமி 27-49 | ஆயில்யம் 17.37 |
| 19 | (2—5—82) | ஞாயிறு | தசமி 27-11 | மகம் 17-30 |
| 20 | (3—5—82) | திங்கள் | ஏகாதசி 26-58 | பூரம் 17-40 |
| 21 | (4—5—82) | செவ்வாய் | துவாதசி 27-10 | உத்திரம் 18-32 |
| 22 | (5—5—82) | புதன் | திரயோதசி 27-47 | அஸ்தம் 19-39 |
| 23 | (6—5—82) | வியாழன் | சதுர்த்தசி 28-48 | சித்திரை 21-10 |
| 24 | (7—5—82) | வெள்ளி | ○ பௌர்ணமிமுழுதும் | சுவாதி 23-06 |
| 25 | (8—5—82) | சனி | ,, 6-15 | விசாகம் 24-06 |
| 26 | (9—5—82) | ஞாயிறு | பிரதமை 8-05 | அனுஷம் 28-06 |
| 27 | (10—5—82) | திங்கள் | துதியை 10-17 | கேட்டை முழுதும் |
| 28 | (11—5—82) | செவ்வாய் | திருதியை 12-45 | ,, 7-04 |
| 29 | (12—5—82) | புதன் | சதுர்த்தி 15-22 | மூலம் 10-11 |
| 30 | (13—5—82) | வியாழன் | பஞ்சமி 17-55 | பூராடம் 13-19 |
| 31 | (14—5—82) | வெள்ளி | சஷ்டி 20-12 | உத்திராடம் 16-13 |

சீனத் தத்துவ ஞானி 'லவட்ஸ' அறிவுரைகள்

# 59 கடுமையைக் கட்டுப்பிடியில்வைத்திரு[1]

தமிழாக்கம் **கோ. வன்மீகநாதன்**

மனித விவகாரங்களைக் கையாள்வதில் கடுமையைக் கட்டுப்பிடியில்
வைத்திருப்பதைப் போலச் சிறந்த முறை வேறொன்றுமில்லை

கடுமையைக் கட்டுபடுத்துவதன் பயன் ஒரு தீமையை முன்னதாகவே
உணர்ந்து தடுப்பதாகும்.

கடுமையைக் கட்டுப்பத்துத்துவதன் பயனாக முன்ஜாக்கிரதையாக
தயாராகவும் பலத்தைச் சேகரித்து வைத்திருப்பதாகவும் ஆகும்.

முன் ஜாக்கிரதையாகத் தயாராகவும் பலத்தைச் சேகரித்து வைத்
திருப்பதாகவும் இருப்பது என்றென்றும் வெற்றிஉடையவனாய்
இருப்பதாகும்

என்றென்றும் வெற்றி உடையவனாய் இருப்பதின் பயன் எல்லையற்ற
ஆற்றல் உடையவனாய் இருப்பதாகும்.

எவனொருவனுக்கு எல்லையற்ற ஆற்றல் இருக்கிறதோ அவன் ஒரு
நாட்டை
ஆள்வதற்குத் தகுதி உடையவன் ஆகிறான்.

நாட்டை ஆள்வதற்கான மூலதத்துவம் நெடிதுகாலம் நிலைபெற்று
இருக்கும்

இதுதான் ஸ்திரமாக வேரூன்றி நிற்பது, ஆழ்ந்த வலிமையை
உடைத்தாய இருப்பது;

இதுதான் அமரத்துவத்திற்கு வழி, நிலைபெற்று நீடித்து
நிற்கின்ற மதிநுட்பத்திற்கு வழி.

---

1. ஒப்பிடுக.

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்
—திருக்குறள் 562

# தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம்

## திருவிடைமருதூர்

13—3—82 சனிக்கிழமை இரவு 7 மணியளவில் இச்சங்கத்தின் பொதுக்குழுக் கூட்டம் செயல் இல்லத்தில் கூடியது. தலைவர் திரு V. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் பேசினர்கள். கீழ்க்கண்ட தீர்மானங்கள் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன.

1. ஏப்ரல் 19 இல் சங்கத்தின்–12வது ஆண்டு விழாவைக் கொண்டாட, புலவர் திரு. சி. மகாலிங்கம் தலைமையில் ஒன்பது பேர் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டது.

2. சதய நாளில் நடைபெறும் இச்சங்கத்தின் 12வது ஆண்டு விழாவிற்குத் தலைமைதாங்கி அருளுரை நல்க ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களை அழைப்பது என ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது.

3. இளைஞர்களுடைய ஆற்றலை ஆக்கபூர்வமான வழிகளில் பயன் படுத்த ஆவன செய்யவேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது.

## அம்பல் கிளை

14—2—82 ஞாயிறு நடைபெற்ற த. நா. சை. வே. சங்க அம்பர் மாகாளக் கிளையின் செயற் குழுவில் நிறைவேற்றப் பெற்ற தீர்மானங் களின் நகல்:—

1. நம் சங்க உறுப்பினர் திரு. இர. தண்டபாணி அவர்களின் இளவல் திரு. இர. சண்முகம் காலமானதற்கும்; நாகை வட்டச் செயலர் திரு. எஸ். திருநாவுக்கரசு அவர்களின் தமையனார் திரு. ச. சிங்காரவேல் காலமானதற்கும் நம் ஆழ்ந்த இரங்கலையும் அவலத்தை யும் அளிக்கின்றது.

2. நம் சங்க உறுப்பினர் இல்லத்துத் திருமணம் முதலிய மங்கல நிகழ்ச்சிகட்கு சங்க வளர்ச்சி நிதியாகப் பத்து ரூபாய்க்குக் குறை யாமல் நன்கொடையளிக்குமாறு சங்கம் கேட்டுக்கொள்கிறது.

3. வரும் தை மாதத்திலிருந்து உறுப்பினர் ஆண்டுக் கட்டணத்தை (1983 முதல்) ஐந்து ரூபா என உயர்த்த இச்செயற்குழு ஒத்துக்கொள்கின்றது.

4. மாவட்ட, மாநில, சிறப்புக் கூட்டங்கள் மாநாடுகள் முதலியவற்றிற்கு நன்கொடை வசூலிக்கக் கிளைச்சங்கத்திற்கு இச் செயற்குழு இசைவு தருகின்றது.

5. அம்பல் திரு. து. கனகசபை பிள்ளையவர்கள் தன் புதல்வியின் திருமணத்தையொட்டி நிதியுதவி கோரிக்கை அளித்ததை ஏற்று மத்திய சங்கத்திற்குப் பரிந்துரை செய்து ஆவன செய்ய நம் சங்கச் செயற்குழு உறுதி செய்கின்றது.இது தொடர்பாக மத்திய சங்கத்தின் பதிலுக்கு ஏற்ப மேற்கொண்டு உதவியளிப்பது பற்றி முடிவெடுக்க நம் சங்கத் துணைத் தலைவர் திரு சிவ. சோதிராமலிங்கம் அவர்களுக்கு முழு உரிமை அளிக்கச் செயற்குழு முடிவெடுக்கின்றது

6. ஒய்வு பெறும் ஆசிரியர்கள் திரு. கோ. சுவாமிநாதன் அவர்கட்கும் திரு. பி. மீனாட்சிசுந்தரம் (புறக்குடி) அவர்கட்கும் பாராட்டு விழா நிகழ்த்த இச் செயற்குழு இசைவு தருகின்றது

7. செயற்குழு, அவசரக் கூட்டம் முதலிய நடத்துதற்கு உரிய உரிமையைத் தலைவர்க்கும் துணைத் தலைவர்க்கும் அளிக்க இக்கூட்டம் இசைகின்றது.

8. நாயன்மார் அறுபான் மூவருள் ஒருவரான அம்பர் சோமாசிமாறனார்க்கு அவர் அவதரித்த திரு நட்சத்திரத்தன்று சிறப்புவழிபாடு செய்ய செயற்குழு இசைகின்றது.

9. சங்க நலத்திற்குரிய அவசரப்பணி செய்வதற்கான சூழ்நிலையில் ரூபா இருபத்தைந்து வரை செலவு செய்யப் பொருளர்க்கு இச்சங்கச் செயற்குழு இசைவு தருகின்றது.

10. வரும் சிவராத்திரி நாளில் இறைவழிபாடு நடத்துவதற்கு இக்குழு இசைவளிக்கின்றது.

11. நம் சங்க இணைச் செயலர் புலவர் நா. தண்டபாணி அவர்கள் அம்பல் பற்றி எழுதிய நூலை அச்சிட்டு வெளியிடு செய்வதற்கு மத்திய சங்கத்தின் மூலம் நடவடிக்கை எடுக்க இச்சங்கம் தீர்மானிக்கிறது;

12. சங்க நிதிக்குரிய கணக்கு வைப்பினைப் (Account) பொருளர் பெயருக்கு வைத்துக் கொள்ள இச் செயற்குழு முழு மனத்துடன் இசைவு தருகின்றது.

## வடகரை ஆலத்தூர் கிளை

ஆரம்ப விழா 21—3—82 ஞாயிறு காலை தமிழ்நாடு சைவ வேளாளர் சங்க நாகைக் கிளைத் தலைவர் திரு. T. சீனிவாச பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. M. K. கோவிந்தன் பிள்ளை (குடந்தை) அவர்கள் பெயர்ப்பலகையைத் திறந்து வைத்தார்கள். திரு. சு. திருநாவுக்கரசு பிள்ளை, திரு. வா. சு. அருணசலம் பிள்ளை, திரு G. சுவாமிநாத பிள்ளை, திரு. N. சண்முக தேசிகர், திரு. தி. இரா. தியாகராசன், திரு. சீனு. பாலசுப்பரமணியன் திரு. சண்முகம் செட்டியார் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்கள்.
ஷை சங்கத்தின் தலைவராக:— திரு. M. சிவபாதசேகரன் அவர்களும் செயலராக திரு. A. இரத்தின சபாபதி பிள்ளை அவர்களும் பொருளராக திரு இரமணி அவர்களும் ஏகமனதாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்கள்.

மத்திய சங்கச் செயலர் பேசுகையில், இச்சங்கம் இனிது வளர அனைத்துச் சைவமடங்களின் ஆதரவு இருந்து வருகின்றது எனவும் குறிப்பிட்டு மடங்களின் ஆசிச்செய்திகளைப் படித்தார்கள்.

## ஒன்பத்துவேலி கிளை

ஆரம்ப விழா 21—3—82 ஞாயிறு மாலை 4 மணி அளவில் நாகை கிளைச் சங்கத்தலைவர் T. சீனிவாச பிள்ளைஅவர்கள் தலைமையில் நடை பெற்றது. பெயர்ப்பலகையினை திரு. N. சண்முகதேசிகர் (திருத்துறைப்பூண்டிக் கிளைத்தலைவர்) திறந்து வைத்தார்கள்.



# புத்தாண்டுப் பிறப்பு

ஜோதிஷம் **இராஜமாணிக்கம்**, திருப்பனந்தாள்.

யுகாரம்பத்திலிருந்து ஆண்டுப் பிரமாணம் 365 நாள், 15 நாழிகை 31 விஞடி, 15 தற்பறை எகின்ற கணக்கில் ஆண்டு பிறப்ப தாகின்றன. ஒவ்வொரு இராசியிலும் சூரியன் சஞ்சரிக்கும் காலம் மாதவாக்கியங்களாக கணக்கிடப்பட்டுள்ளது. மாதவாக்கியத்தில் உள்ள நாழிகை விஞடிக்கு ஒவ்வொரு மாதப் பிறப்பும் ஏற்படுகிறது. கலிசுத்த தினம் பார்த்து மாதப்பிறப்பின் வாரம் காண்கிறோம். இவ்விதம் கணித ரீதியாக கொள்பவற்றை கணிக்காமலே வருஷம் பிறக்கும் நாழிகை, திதி, நக்ஷத்திரம், வாரம், மாதங்கள் பிறக்கும் வாரம் ஆகியவற்றை பஞ்சாங்க சாஸ்திரத்தில் அதிகம் பரிச்சயம் உள்ளவர்கள் எளிதில் சொல்வர். அவ்விதம் எளிதில் காணும் வழி முறைகளை விளக்குகின்ற நூலுக்கு ''அகணித பஞ்சாங்க சாஸ்திரம்'' என்று பெயர். அகணிதமுறையில் பஞ்சாங்கம் சொல்பவர் ''அகணித பஞ்சாங்கி'' எனப்படுவர்.

மேற்கண்டவாறு ஆண்டில் பிரமாணத்தில் மறு ஆண்டு பிறப்ப தானது. முதல் ஆண்டு பிறந்த நாழிகைக்கு 16-ஆம் நாழிகையிலும், திதிக்கு 12-ஆம் திதியிலும், நக்ஷத்திரம் 11ஆம் நக்ஷத்திரதிதிலும் பிறப்பதாகின்றது. உதாரணமாக துன்மதி வருஷப் பிறப்பன்று உதயாதி 28நாழிகை 1விஞடிக்கு பிறந்துள்ளது. அத்துடன் 16நாழிகை சேர்ந்த காலஅளவில் இந்த துந்துபி ஆண்டு பிறக் கின்றது. அவ்விதம் துன்மதி ஆண்டு தசமி திதியில் பிறந்தது. தசமி முதல் பௌர்ணமி வரையில் 6 திதிகளும் பிரதமை முதல் 6 திதி களும் சேர்ந்த 12 ஆம் திதியாகிய சஷ்டிதிதியிலும், அவ்வாண்டு பிறந்த ஆயில்ய நக்ஷத்திரம் முதல் 11வது மூல நக்ஷத்திரத்திலும் இப்புத்தாண்டாகிய துந்துபிஞ பிறந்துள்ளது காண்க.

மற்றும் ஒவ்வொரு ஆண்டிலும் நவநாயகர்களைக் காணவேண்டு மாயின் மாதங்கள் பிறக்கும் வாராதிபர்களை அவசியம் அறிதல் வேண்டும். அவ்வதிபர்கள் ஞ பிறக்கின்ற காலத்தில் உள்ள நிலைமையைக்கண்டு அவர்களின் தன்மையில் அவ்வாண்டின்

பலன்களை நிர்ணயிக்கப் படுவதாகிறது. அதற்கு வாராதிபர்களைக் காணச் சுலபவழி உண்டு. அம்மார்க்கம் யாதெனின் ஒவ்வொரு ஆண்டும் முதல் ஆண்டு பிறந்த வாரத்திற்கு 2வது வாரத்தில் பிறக்கும். உதாரணமாக துன்மதி ஆண்டு சோம வாரத்தில் பிறந்தது. துந்துபி ஆண்டு அதன் அடுத்த வாரமாகிய மங்கள வாரத்தில் பிறந்துள்ளது. கார்த்திகை மாதப் பிறப்பும் அதே வாரத்தில் பிறப்பதாகும். மற்றும் சித்திரை மாதம் பிறந்த வாரத்துக்கு 2வது வாரம் மார்கழி மாதம் பிறக்கும். 3ஆம் வாரம் புரட்டாசி மாதம் பிறக்கும். வைகாசி, ஆடி, தை இம்மாதங்கள் 4வது வாரத்தில் பிறக்கும் மாசி மாதம் 5ஆம் வாரத்தில் பிறக்கும். ஐப்பசி மாதம் 6வது வாரத்தில் பிறக்கும். ஆனி, ஆவணி, பங்குனி இம்மாதங்கள் 7ஆம் வாரத்தில் பிறக்கும். இவ்விதமாக மாதங்கள் பிறக்கும். வாராதிபர்களை இலகுவில் காணலாம்.

இவ்விஷயங்களின் பரிச்சய நுட்பத்தினை வீபேசுரஉளமுடையான் நூலாசிரியர் கீழ்க்கண்ட கவியினால் லோகத்திற்கு உணர்த்தியிருக்கின்றார்.

நோக்க முன்னுண்டிலாடி யீரெட்டின்மே
றெய்ய பக்க மீராறு பன்னொன்றுநா
டாக்கும் வாரமிரண்டிற் சித்திரை முதற்
சந்திரன் மறைவேதம காருடி
யாக்கு மீசர்கண் சுந்தன் வெளிபணி
யணி யுகங்கள் பஞ்சாக்கரம் பற்றுமால்
தேக்கு மான்டா நந்தயு கங்களுஞ்
செருக்கு விமேசர் பாதமின் கன்னயே.

என்று ஆண்டுகளின் பிறப்பு மாதங்களின் பிறப்பு யுகங்கள் தோறும் ஏற்படுகின்ற விபரம் அறிய செல்வதினின்றும் வரும் காலத்தினைத் திட்டவட்டமாக நிர்ணயித்துக் கொள்ளலாம்.

இப்போது கலியுகாப்தம் 5083, 25வது பரிவிருத்தி பிரபவாதி 56வது சுபிட்சமான துந்துபி வருஷம் பிறந்துள்ளது. கலியுக சுத்த தினம் 1856 607 நாள், 43நாழிகை 32விநாடி, 30தற்பறை.

இவ்வாண்டில் இராஜா சுக்கிரபகவான்; மந்திரி செவ்வாய் பகவான்; அர்க்காதிபதி செவ்வாய் பகவான்; சஸ்யாதிபதி சுக்கிர பகவான்; சேனாதிபதி செவ்வாய் பகவான்; இரஸாதிபதி சூரிய

பகவான்; தானியாபதி குருபகவான்; நீரயாதிபதி சுக்கிரபகவான்; மேகாதிபதி செவ்வாய் பகவான் ஆகிறார்கள்.

இவ்வதிபர்களில் குறள் அதிக அதிபதித்துவம் வகிக்கினும் வான மண்டலத்தில் இவர்களின் நிலைமையில் உலகத்திற்கு நல்ல பலனை விளைவிக்கும் இந்த துந்துபி ஆண்டின் பலனை கடைக்காடர் அருளிய துந்துபி வருஷ பலன் வெண்பாவில் கூறுகிறபடி பலன்கள் சித்திக்கும். அதாவது லோகத்தில் பிரஜைகளுக்கு சுகம் தரும். சோபனம் உண்டாகும். செந்நெல் விளைந்து இலட்சுமி கடாட்சமாக நல்ல செல்வம் பெருகும். உலகெங்கும் நல்ல மழை பெய்து பயிர்கள் தழைக்கும். லோகத்தில் சுபிட்சம் நிலவும்.

துந்துபி வருஷத்திய பலன் வெண்பா

துந்துபியின் மிக்கசுக கோபனமுண்டாம் புவியில்
சந்ததமும் வாசமலர்த் தாமரைமேல–இந்திரையும்
செல்வமிகக் கொடுப்பாள் செந்நெல விளைவுண்டாமே
நல்ல மழையுண்டு நவில்.

உ
சிவ சிவ

# மதுரையில்
## திருவிளையாடற் புராண பிரசங்க நிதி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21- வது அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின்வண்ணம் நடத்தப்பெறுவது

துன்மதி-ஸு பங்குனி-மீ 30உ (12—4—82) முதல்

துந்துபி-ஸு சித்திரை-மீ 22உ (5—5—82) முடிய

இடம்: தருமையாதீனம் ஸ்ரீ திருஞானசம்பந்தர் திருமடம்
397, வடக்கு மாசி வீதி, மதுரை.

1. கயப்பாக்கம் திரு. க. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள்
12—4—82 முதல் 19—4—82 வரை
திருவிளையாடற் புராணம் .... 1 "**மதுரைக் காண்டம்**',

2. மதுரை திரு. தா. குருசாமி தேசிகர் அவர்கள்
20—4—82 முதல் 27—4—82 வரை
திருவிளையாடற்புராணம் ... 2 "**கூடல் காண்டம்**"

3. நெல்லை சிவமணி புலவர். திரு. ம. சிவசம்பு பி. லிட்., அவர்கள்
28—4—82 முதல் 5—5—82 வரை
திருவிளையாடற் புராணம் ....
3 "**திருவாலவாய்க் காண்டம்**"

நாடோறும் மாலை 7-மணி முதல் 9-மணி வரை
விரிவுரை நிகழ்த்துவர்.

ஆணைப்படி,
முத்து. மெய்கண்டதேவன்,
மானேஜர், ஸ்ரீ காசிமடம்.

திருப்பனந்தாள்,
22—3—82

சென்ற இதழ்த் தொடர்ச்சி

# வாதவூர்த் தேசிகனின் வனப்புமிகும் உவமை நலம்

புலவர், முருகு. சுவாமிநாதன், பி.லிட்., (எம்.ஏ)

இறைவனின் அருட்கொடையால் பெய்கின்ற மழைத்துளியால் உலகில் மரம், செடி, கொடிகள் தோன்றுகின்றன. மக்களும் விதை யிட்டு நீருற்றி வளர்ப்பதும் உண்டு. மரங்கள் சில இயல்பாகவே சிறப்புடையனவாக அமைகின்றன; சில இருக்கும் இடத்தாலும், தன்னிடத்து உள்ள பொருள்களாலும் புகழ் பெறுகின்றன. தெய்வங் களை அடியில் கொண்டுள்ள மரங்கள் தெய்வாம்சம் உடையனவாகக் கருதப்படுகின்றன. முள்ளும், முசுக்கட்டைப் பூச்சிளும் உடைய மரங்கள் அருகில் அணுகுவார் இன்றி வளர்கின்றன. காற்றுக்கு எதிர்த்து நிற்கும் மரங்கள் சாய்கின்றன. வளைந்து கொடுக்கும் நாணல் போன்றவை என்றும் வாழ்கின்றன. மண் வளம் மிக்க நிலத்தில் மரங்கள் என்றும் நல்ல முறையில் வளர்ந்து நிலைக்கின்றன. ஆற்றங் கரை, மென்னிலம் ஆகிய இடங்களில் உள்ள மரங்கள் காற்றினாலும் நீர் அரிப்பினாலும் வேர் விடுதல் இன்றி மேம்போக்காக வளர்ந்து உட்போக்கு இன்றி, காற்றுக்கு எதிர் நிற்க முடியாமல் சாய்கின்றன. அம்மரங்களைப் போலக்கருமையான கண்களைக் கொண்ட மயக்குகின்ற பெண்களிடையே என்னுடைய ஐம்புலன்களைச் செலுத்திச் சிற்றின்பம் விரைந்து பேரின்பமுத்தி எய்துதற்கான நிலைத்த செயல்களைச் செய் யாமல் அழிதற்கேதுவான நிலையில் என்னை நானே வலிமையற்ற வனாக்கிக் கொள்கின்றேன் என்கின்றார் திருவாதவூரர்:-

காருறு கண்ணியர் ஐம்புலன்
ஆற்றங் கரைமரமாய்

தூய்மைக்கும் வெண்மைக்கும் வடிவமானது பால்; பசு வழங்கும் கொடைகளுள் சிறந்தது பாலாகும்; பாலும் பாலிலிருந்து பெறப்படு கின்றதயிரும் இறைவனது அபிஷேகத்திற்குப் பயன்டடுகின்ற சிறப் புடையன; பாலைக் காய்ச்சி பதப்படுத்தி அதில் மோரைச் சேர்த்துப் புரைகுத்தினால் தயிர் கிடைக்கும்: தயிரைக் கடைந்து அதிலிருந்து வெண்ணெய் எடுப்பார்கள்; அப்போது தயிரைப் பாத்திரத்தில்

இட்டு மத்தால் கடைவர். திருப்பாற்கடலில் அமுதமெடுக்கக் கடைந்த போது மேருமலையை மத்தாகவும், வாசுகியை நாணாகவும் கொண்டு கடைந்ததாக இலக்கியங்கள் கூறும். அவ்வாறு கடையும்போது மத்தின் இடையில் பட்ட தயிரானது மத்தின் சுழற்சிக்கும் மத்தை இயக்குவோரின் வலிமைக்கும் அட்பட்டுத் திரிந்து மோராக மாறும். ஆணவம் கன்மம் மாயைகளாகிய மலங்கள் அழுக்குகள் என்னைக் கலக்கிச் சுழற்றித் துன்புறுத்துகின்றன என்று இரங்குவர் மணி வாசகர்.

வன்தயி ரிற்பொரு மத்துறவே,

மத்துறு தண்தயி ரிற்புலன்

நாரும், பொதும்பும், விழுதும், கொடியும், மரமும், தயிரும் உயிரற்ற இயற்கைப் பொருள்கள்; மண்ணிலே நெளிகின்ற நாங் கூழ்ப் புழுவைக் காண்கின்றோம். அது உயிருடையது; தன்னியக்கம் உடையது; தொடு உணர்ச்சி கொண்டது. அது மண்ணில் இருக் கையில் சிறிது அசையாமல் இருந்தால் உடனே சில எறும்புகள் அதனை அணுகித் தடவிப் பார்க்கும். இறந்து விட்டாலோ பல நூறு எறும்புகள் சேர்ந்து கொள்ளும்; ஒவ்வொன்றும் ஒரு அணுப் பகுதியைக் கடிக்கும்! தத்தம் விருப்பப் பட்ட திசைகளில் இழுக்கும். நாலைந்து எறும்புகள் ஒரு திசையில் இழுத்துச் செல்ல வேறு சில எறும்புகள் அதனை மாற்றுத் திசையில் இழுக்கும்; பின் எல்லாம் சேர்ந்து அரிக்கும். அதனால் புழுவின் உடல் துளைகளாகும். நாங்கூழை எறும்புகள் அரிப்பதுபோல என்னை ஐம்புலன்களும் அரிக்கின்றன; அவை இஷ்டப்பட்ட பொருளில் என்னைக் கவர்ந்து சென்று கருத் தினைச் செலுத்தச் செய்கின்றன. அதில் கருத்தைச் செலுத்தி நான் இன்பதுன்பங்களிடை ஆழ்கின்றேன். நான் வெற்றாள்; அத்துடன் தனியனாக உள்ளேன்; ஐம்புலக்கள்வரிடமிருந்து நீதான் என்னைக் காக்க வேண்டும் என அலக்கணுறுகின்றார் மாணிக்கவாசகர்.

எறும்பிடை நாங்கூழ் என

நாங்கூழ்ப் புழுவை அரிக்கின்ற எறும்பு, வாசனையுள்ள பொருள் களிலும் இனிப்பான பண்டங்களிலும் நாட்டமுடையது. இனிப்பான பண்டம் உயரத்தில் இருந்தாலும் அது தேடிச் செல்லும். அத்துடன் கூட்டங் கூடி நெய், சர்க்கரை முதலான பொருள்கள் உள்ள இடங் களில் மொய்த்துக் கொள்ளும். உள்ள பொருள்களை, நிலையினவற்றை

விரும்பாது, அவை நிற்க இல்லாத-நிலையற்ற-பொருள்களை விரும்பி மையல் கொள்ளுகின்ற என்னைப்-பொறிவழிச் செல்லுகின்ற இயல்புடைய என்னை-புலன்வழிச் செல்லுகின்ற அவாக்கள் நெய்க்குடத்தை மொய்க்கின்ற எறும்புக் கூட்டம் போல மொய்க்கின்றன என்கின்றார் ஆளுடைய அடிகள்.

'நெய்க்குடந் தன்னை எறும்பெனவே'

சுவையான இனிப்பு மிகுந்த பண்டங்களைத் தேடி அலைந்து உண்டு நாங்கூழ்ப் புழு முதலானவற்றைத் தின்கின்ற எறும்பும் துன்பம் அடைதல் உண்டு; நீரிலும் தீயிலும் சிக்கிக் கொண்டால் அதுபடும் துன்பம் அளவிடற்கரியது; அதிலும் இருபக்கமும் நெருப்புப் பற்ற இடையில் அது சிக்கினால் அந்தப்பக்கமும் இந்தப்பக்கமுமாக அது செல்லும்; திரும்பும்; மீண்டும் ஒருபுறம் செல்லும்; இவ்வாறெல்லாம் அவ்வெறும்பு துன்பமுறுதல் போல நானும் அலைப்புறுகின்றேன் என்கிறார் குருந்தின் கீழே நிறைந்தஞானம் உபதேசிக்கப் பெற்றவர்.

''இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து''

ஒளியுள்ள பொருளை நாடிச் செல்வது விட்டில் பூச்சியின் இயல்பு; அது தன்னைச்சுடும், அழிக்கும் என்று அறியாதுஅதன்பகட்டில் மயங்கி மீண்டும் மீண்டும் அதனை அணுகிப் பின் அதிலேயே சிக்கி அழிவது அதன் பண்பாகும்; இனிய மொழிகளைப் பேசுகின்ற பெண்டிர் ஆகிய பற்றிப் பரவிச்செழிக்கின்ற தீயில், அவரிடம் கொள்ளுகின்ற மோகம் சின்னாள் இன்பம் பயக்கும்; மும்மைக்கும் பயன்தராது; பிறவிக் கடலிடைச்செலுத்தும் என்பதனைஉணராதுசென்றுவிழுகின்றவிட்டில் போலாவேன் நான் எனத் தன்னை விட்டிற் பூச்சியுடன் ஒப்பிட்டுக் கொள்கின்றார் திருவாசகம் வழங்கிய தேவர்.

செழிகின்ற தீப்புகு விட்டிலில்

ஈ மொய்த்தாற் போல் எனும் வழக்குண்மை அறிந்ததே; இனிப்பும், சுவையும் மிகுந்த பண்டங்களில் ஈ மொய்க்கும். அதே ஈ கழிவுப் பொருள்களில் அமர்ந்து சுவைத்து உடனே நாம் உண்ணும் பொருளிலும் வந்து உண்ணும். எனவே அது தொற்று நோய்களுக்குக் காரணியாகின்றது. எல்லாப்பழங்களிலும் சுற்றிலும் ஈமொய்ப்பது போலவே சுவை மிகுந்த இனிப்புடைய பலாப்பழத்தில் ஈக்கள் கூட்டங் கூட்டமாய் மொய்க்கும். மான்போன்ற கண்களையுடைய அழகிய பெண்களின் மார்பகமாகிய பலாப்பழத்தில் விழைவு

கொண்டு எப்போதும் சேர்கிறேன்; ஈப்போல மொய்க்கின்றேன்' எனத் தன்னைக் கண்டு தானே இரங்கும் வகையில் மணிவாசகர் மொழிவது அரியதோர் உவமையாகும்.

உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப்பழத்து ஈயினொப்பாய்

'நீரின்றி அமையாது உலகு' என்றான் வள்ளுவன், இதற்குப் பரிமேலழகர் 'எவ்வுயிர்க்கும் நீரையின்றி உலகியல் அமையாதாயின்' என உரை காண்பார். எனவே எல்லா உயிர்களின் உயிர் வாழ்க்கைக்கும் நீர் மிகவும்இன்றியமையாதது என்பது வெளிப்படை. உயிர்களுள்ளும் நீரிலேயே கிடப்பதும், நீரை விட்டுப் வெளியேவரின் உயிரை விடுவதுமாகிய இயல்பினை உடையது மீன். 'தண்ணீரில் கிடக்கின்ற மீனைத் தரையில் போட்டாற்போல' எனும் பழமொழி வழக்குண்மையும் காணலாம். மீன்களுள் சிறியவை பெரியவை என அளவு வேறுபாடு உண்டு. பெரியமீன்கள் நீரின் அளவு அதிகமாக இருப்பின் வாழும். ஆனால் சின்னச்சின்ன தலைப்பிரட்டைகளோ, சிறிதளவு நீர் இருந்தாலும் அதில் வாழும் இயல்புடையன. அவையும் இறக்கும்படி நீர்வற்றுகின்ற நிலையும் வருவதுண்டு. இவ்வாறு நீரற்ற நிலையில் சிறிய மீன்கூடத்துவண்டு விழுந்து விடுவதைப்போல இறைவனின் அருள் வெள்ளமாகிய நீரைத் தான் பெற உரிய நெறியைக் கைக்கொள்ளாததால் அந்நீர் வற்ற இறைவனின் திருமுன்னிலையில் விலகித் துன்பமடைவதாக மனம் கனிந்து மொழிவார் மங்கைபங்கரால் உபதேசம் பெற்ற அடிகள்.

பெருநீ ரறச்சிறு மீன்துவண் டாங்கு

வீட்டு விலங்குகளுள் நன்றிமிக்கது நாயாகும். தம்மை இழிவு படுத்திக் கொள்ள நினைப்பவர்கள் தம்மை நாயோடு ஒப்பிட்டுக் கொள்வர். மணிவாசகர் 'நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு' என்பர். அந்தநாயானது எந்தப் பொருளானாலும் நாக்கால் நக்கியே உண்ணும் பெற்றியினையுடையது.'ஆத்து நிறைய தண்ணி போனாலும் நாய்நக்கித்தான் குடிக்கும்' என்பது பழமொழி.

''கடலினுள் நாய் நக்கியாங்கு''

எனும் அரிய உவமை வழியாகத் தான் இறைவனின் கருணையாகிய கடல் வெள்ளத்தைப் பெற இருந்தும் அதை நாய் நக்கியது போல

இழிவான நிலையில் எடுத்துக் கொள்கிறேன் என்று கூறுவார் மாணிக்கவாசகர்.

இவ்வாறான உவமைகளை எடுத்துக் காட்டிய அவர் முத்தாய்ப் பாக ஓர் உவமையினை ஆள்கின்றார்.

உண்பது போலவே நீரைக் குடித்தலும் உடலுக்கு நலம் பயப்பதொரு செயலாகும். நீர் வேட்கை வந்தால் நீர் குடித்தாலன்றி அவ்வேட்கை தணியாது; காட்டிலும், பாலை நிலத்திலும் நீர் வேட்கை வந்தால் நீர் உண்ணவழியில்லை. ஆனால் நீர் வெள்ளத்தில் செல்கையில் அந்நீரை எடுத்துண்ண அறியாது உழல்கின்ற முட்டாள்களைப் போன்று இறைவனின் அருட்பெருக்காகிய வெள்ளத்திடை மூழ்கித் துன்பத்தினின்றும் நீங்க வழியறியாது திகைக்கிறேன் என்பார் அவர்.

வெள்ளத்துள் நாவற்றிங்கு யாதல்

என்பது அது.

இவ்வுவமைகளில் 'அலங்கார மாதல்' கிடையாது. பொருள் புலப்பாடும், கேட்டார்க்கு இன்பம் பயத்தலுமே உண்டு.



## திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

தஞ்சைத் தரணியில் குடந்தைக்கு அண்மையில் உள்ள திருநாகேச்சரம் பாடல் பெற்ற திருத்தலமாகும். இது சேக்கிழார் திருவடி ஞானம் பெற்றதலம்; இப்பதியில் உள்ள அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில் இராசகோபுரமும், கட்ட கோபுரமும் தெய்விக சிந்தனையுடைய அன்பர்களின் கூட்டுணர்வின் வழியாக அரசு மானியத்துடன் திருப்பணி செய்யப் பெற்று வருகின்றன. பங்குனித் திங்களில் குடமுழுக்கு நிகழவிருக்கிறது. ஆத்திக அன்பர்கள் இயன்ற அளவில் காணிக்கையளிப்பார்களாக!

அனுப்ப வேண்டிய முகவரி:-

செயல் அலுவலர்,
ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்சரம்.

நான்கும் உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாய ஞானம் என்றும்; உண்மைச் சரியை, உண்மைக் கிரியை, உண்மை யோகம், உண்மைஞானம் என்றும் இருவகைப்படும். இவற்றுள் உபாயச்சரியை முதலிய நான்கும் உலகப் பயனை நோக்கிச் செய்வன வாம். உண்மைச்சரியை முதலியன அன்பு மீதூரச் செய்வனவாம். உண்மைச்சரியை: ஐம்பொறி வாயிலாகச் சிவபெருமானது உருவத் திருமேனியை நோக்கி வழிபடுதலாம். உண்மைக்கிரியை: ஐம் பொறிகளும் மனத்தொடு பட்டுச் சிவபெருமானின் அருவுருவத் திருமேனியை நோக்கி வழிபடுதலாம். யோகம்: ஒருமை உணர்வுடன் இறைவனின் அருவத் திருமேனியை நோக்கி வழிபடுதலாம். இவற்றின் பயன் சாலோகம் முதலிய பதமுத்திகளைப் பெறுதலும் ஞானம் பெறுதலும் ஆம். உயிருடன் இருந்து மலநீக்கம்பெற உதவும் திருவருள் பரஞானம் எனப்படும். அத்திருவருளைப் பெறு தற்கு உரிய நெறியை உணர்த்தும் உயரிய நூல்கள் அபரஞானம் எனப்படும். இவற்றுள் முன்னையதன் பயன் வீடுபேறும். பின்னையதன் பயன் பத முத்திகளைப் பெறுதலாம்.

### நூலின் மரபும் பயனும்

11. தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
 செப்பினர்பின்பு அவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற்று அவர்கள்திரு வடிகள் போற்றி
 விளம்பியநூல் அவைஇரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்தில்உறை திருவருளும் இறைவன் நூலும்
 கலந்துபொது உண்மைஎனக் கருதி யானும்
அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்
 ஆசில்சிவப் பிரகாசம் ஆகும் என்றே.

(தெ-ரை) சிவபரம் பொருளை முதலாகக் கொண்டு வளர்ந்து வந்த சந்தான குரவர்களில் முற்கூறிய முதல்குரவராய மெய் கண்டார் சிவஞான போதம் என்னும் நூலினை அருளினர். பின்பு அவர்தம் ஞானமகவாக இருந்தருளிய அருள்நந்திசிவாச்சாரியார் அந்நூலின் வழியாகச் சிவஞானசித்தியார் என்னும் நூலை அருளினர். அவ்விரு குருமூர்த்திகளின் திருவடிகளை வணங்கி அவர்கள் அருளிய அவ்விரு நூல்களையும் விருப்புற்று ஆராய்ந்து என்னுடைய அறிவில் பொருந்தியிருக்கும் திருவருளும் இறைவன் அருளிய ஆகம நூல் களின் கருத்தும் ஒருங்கு பொருந்த, பொது, உண்மை என இரு

அதிகாரங்களால் யானும் அன்புமிக இந்நூலை உரைப்பன் நூறு விருத்தப்பாக்களால் இயன்ற இந்நூல் குற்றமற்ற சிவப்பிரகாசம் என்னும் பெயர் பெறுவதாகும்.

அன்றே என்பது அசைநிலையாம். தெரித்த- முன்பு (ஐந்தாம் செய்யுள்) கூறப்பெற்ற முதல்குரவர்- புறச் சந்தான குரவருள் முன்னவராக இருப்பவர்: மெய்கண்டார். உயிர் உணர்ந்து தெளிதற்குரிய சிவஞான நெறியினைச் செவ்வன் ஆடியில் செறித்து இனிது விளக்கித் திட்பம் நுட்பம் அமைய விளங்குவது சிவஞானபோதமாம். ஆதலின் 'உயர் சிவஞானபோதம்' என்றார். மெய்கண்டாரைக் குருவாகக் கொண்டு ஞானம் பெற்றவர் அருள்நந்திசிவாச்சாரியார் ஆதலின் அவர் புதல்வர் என்றார். இந்நூல் தோன்றற்குத் திருவருளும் குருவருளும் காரணம் என்பதை ஆசிரியர் உணர்த்தும் திறன் அறிதற்குரியது. அருத்தி- அன்பு. அருத்திமிக உரைப்பன் என்பதால் ஆசிரியரின் அருள் உள்ளம் நன்கு விளங்கும். ஆசு- குற்றம். 'ஆசில் சிவப்பிரகாசம்' என ஆசிரியரே அருளுவதால் அதன் மேன்மை விளங்கும்.

### அவையடக்கம்

12. தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா; இன்று
 தோன்றியநூல்எனும் எவையும் தீதாகா; துணிந்த
நன்மையினர் நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம்
 நவையாகா தெனஉண்மை நயந்திடுவர்; நடுவாம்
தன்மையினர் பழமை அழகு ஆராய்ந்து தரிப்பர்;
 தவறுநலம் பொருளின்கண் சார்வு ஆராய்ந் தறிதல்
இன்மையினர் பலர்புகழில் ஏத்துவர்; ஏதிலருற்று
 இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர்; தமக்கென ஒன்றிலரே.

(தெ-ரை) பழமை உடையன என்று கூறப்படும் நூல்கள் எல்லாம் நல்லனவாகா. இப்பொழுது தோன்றியன என்று கூறப்படும் நூல்கள் எல்லாம் தீயனவாகா. தெளிந்த அறிவினை உடையார் உயர்ந்த இரத்தினத்தில் மூடியிருக்கும் களங்கத்தைக் கண்டு அது முற்றிலும் குற்றமுடையது என விலக்கிவிடாது அம் மாசினை விடுத்து அதன் உண்மைத் தன்மையையே கண்டு விரும்புவர். அதுபோல ஒரு பொருளின் குணம் குற்றம் ஆகிய இரண்டையும் ஆராய்ந்து தெளிந்தவர் இந்நூற்கண் ஒரோவழி காணப்பெறும் குற்றங்களைக் கருதாது

இதன்கண் கூறப்பெற்றிருக்கும் முப்பொருள் உண்மையை ஏற்றுப் போற்றுவர். இடைப்பட்ட அறிவினை உடையார் இந்நூற்கண் உள்ள அழகு நலங்கள் ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்து ஏற்பர். பொருட்கண் உள்ள குணங்குற்றங்களை ஆராயும்அறிவற்ற கடையாயினர் ஒன்றனைப் பலரும் புகழின் தாமும் புகழ்வர். ஒன்றனைப் பலரும் இகழின் தாமும் இகழ்வர். அவர் தமக்கென ஒரு குறிக்கோளும் அறிவும் அற்றவ ராவர்.

எனவே இந்நூலைத் தலையாயினரும் இடையாயினரும் ஏற்பர் என்பதும், கடையாயினரின் செயல்பற்றிக் கவல வேண்டுவதின்று என்பதும் ஆசிரியர் கருத்தாம். திறனாய்வாளருக்கு வேண்டுவதாக இக்காலத்தார் கூறும் பண்பு இப்பாடற்கண் இயைந்திருப்பது அறியத் தக்கதாம். பொருளின்கண் தவறு நலம் சார்பு ஆராய்ந்து என மாறுக. முதல் வழி சார்பென வரும் மூவகை நூல்களில் இந்நூல் சார்பு நூலாக விளங்குவதாம் சுருங்கச் சொல்லல் முதலியன இந் நூற்கண் அமைந்துள்ள அழகுகளாம். பழமை அழகு ஆராய்வார் இவற்றை ஏற்றுப் போற்றுவர்.

# பொது அதிகாரம்

## பதி இலக்கணம்

13. பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சம்தெரித்தல்; பதிபரமே; அதுதான்
நிலவும்அரு உருஅன்றிக் குணம்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்தம் ஆகி
அலகில் உயிர்க்கு உணர்வாகி அசலம் ஆகி
அகண்டிதம்ஆய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலவுஅரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகப் பெரிதாய்த்
திகழ்வதுதத் சிவம்என்பர் தெளிந்து ளோரே.

(தெ-ரை) வேதம் ஆகமம் பற்பல கலை நூல்கள் ஆகிய எல்லா வற்றினும் உட்கிடையாக விளங்குவது இறை உயிர் தளை ஆகிய முப்பொருள் உண்மைகளைத் தெரிவித்தலேயாம். அவற்றுள் இறை எனபது அவ்விரண்டற்கும் மேலாய பொருளாம். அவ் இறைதான் விளங்குகின்ற அருவமும் உருவமும் அல்லாததாய், குணமும் அடை யாளங்களும் இல்லாததாய், இயல்பாகவே பாசங்களின் நீங்கியதாய்,

ஒன்ருய், என்றும் உள்பொருளாய், அளவிறந்த உயிர்களின் அறிவுக்கு அறிவாய், அசைவற்றதாய், பிற பொருள்களின்றும் துண்டிக்கப் படாததாய், இன்பவடிவாய், அன்பினுலன்றி எய்தற்கரியதாய், மெய்யுணர்வு உடையார்க்கு எய்தற்குரிய வீடுபேருய்ச், சிறியதினும் சிறியதாய்ப், பெரியதினும் பெரியதாய் விளங்குவதாம். அதனையே மேலாய சிவபரம்பொருள் எனத் தெளிந்தார் உரைப்பர்.

இறை உயிர் தளை ஆகிய மூன்றனுள் இறையே உயர்ந்ததாம்; அது அருவென்ருே உருவென்ருே சொல்ல இயலாமைக்குக் காரணம் அவ்விரண்டாகவும் விளங்குதலேயாம். 'அருவும் உருவும் அருவுருவ மாகிப் பருவ வடிவம் பலவாய்' என்பர் குமரகுருபரரும். குணம்–உயிர்கட்கு உற்ற முக்குணம். அவை இல்லாதவன் இறைவன் என்பது பற்றிக் 'குணமிலி' எனத் திருவாசகமும் கூறும், குறையுடைய இம் முக்குணங்கள் இலனுயினும் குறைவற்ற எண் குணங்களை உடையான் இறைவன் என்பது அறியத்தக்கதாம். அதுபற்றியே திருவள்ளுவனும் 'எண்குணத்தான்' என்ருர் குறி-அடையாளம். இயங்கு பொருள் இயங்காப் பொருள் ஆகிய அனைத்திலும் நிற்பவனுதலின் 'குறிகள் இன்றி' என்ருர். 'ஒரு நாமம் ஓர்உருவம் ஒன்றும் இலார்க்கு ஆயிரம் திருநாமம்பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ' என்னும் திருவாசகமும். ஏகமாய்-ஒருவனுய். 'ஒன்று என்றது ஒன்றே காண் ஒன்றே பதி' என்னும் சிவஞானபோதமும். நித்தமாய்-என்றும் நிலை யுடைய பொருளாய். 'பண்டும் இன்றும் என்றும் உள்ளபொருள் என்றே பல்லாண்டு கூறுதுமே' என்னும் திருமுறையும். அலகில் உயிர்–அள வற்ற உயிர். அசலம்-அசைவற்றது. யாண்டும் நீக்கமற நிற்கும் பொருளாதலின் ஒருவழிக் கிடக்கும் பொருள் போல்வதன்ரும். அன்றி–அன்பினுலன்றி. அணுவினும் அணுவாய் அண்டங்களினும் அண்டமாய் நிற்றல் பற்றிச் 'சிறிதாகிப் பெரிதாய்' என்ருர். 'இல் நுழை கதிரின் துன் அணுப்புரையச் சிறியவாகப் பெரியோன்' என்னும் திருவாசகமும். தத் - அப்பொருளை.

14. நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்
நிறைகிரியை தரஅதனை நிமலன் மேவி.
நாடரிய கருணைதிரு உருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொள் தனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவிஅவை ஒடுக்கும் மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றி ஆமே.

(தே-ரை) நிலைபெற்று விளங்கும் மேலான சிவசத்தி தனது செயற்பாட்டினால் விருப்பாற்றல் அறிவாற்றல் நிறைந்த தொழிலாற்றல் என்னும் ஆற்றல்களைத் தர அவ் ஆற்றல்களை வினையின் நீங்கி விளங்கிய அறிவினனாகிய சிவபரம்பொருள் பொருந்தித் தன் முனைப்பால் அடைதற்கரிய திருவருளையே திருவுருவாகக் கொண்டு நாதம் விந்து முதலிய தத்துவங்கள் வந்து இயைகின்ற ஒளி மிகுந்த சுத்த மாயையைப் பொருந்தி வேதம் ஆகமம் முதலிய பல கலைகளையும் அருளிச் செய்து, அசுத்த மாயை பிரகிருதி மாயை ஆகியவற்றில் கொடிய வினைவயத்தால் ஆய உடல் கருவி உலகு நுகர்வு ஆகியவற்றைப் பெருமை மிகப் படைத்து அளித்து அவற்றைத் தோன்றிய முறையில் பின் ஒடுக்கவும் செய்வன். அவ்வாறு செய்தருளும் திருவுருவம் அரு, அருஉரு, உரு ஆகிய மூவகையவாம்.

சிவமும் சத்தியும் வேறன்று. ஆயினும் உயிர்களின் வினைமாசு நீங்க ஐந்தொழில் செய்யுங்கால் கொள்ளும் ஆற்றலே சத்தியாம். அது உயிர்கட்கு அருளுதற் பொருட்டுப் பொதுவகையால் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாய ஞானத்தையே வடிவாகக் கொண்டிருக்கும். அதனைப் பராசத்தி என்பர். ஐந்தொழில் படுங்கால் அவ்வாற்றல் அறிவு இச்சை செயலென முத்திறப்படும். அவற்றுள் இறைவன் அறிவாற்றலைப் பொருந்திய பொழுது அருவாக நிற்பன் அந்நிலையே சிவம் எனப்படும். அறிவாற்றலையும் தொழிலாற்றலையும் ஒப்பப் பொருந்தும் பொழுதும் அருவுருவத் திருமேனியாக நிற்பன். அத்திருவுருவைச் சதாசிவம் என்பர்; அறிவாற்றல் குறைந்தும் தொழிலாற்றல் மிகுந்தும் பொருந்திய நிலையில் உருவத் திருமேனி கொள்வன். அத்திருவுருவை மகேசுவரர் என்பர். இவ்வாறு கொள்ளும் மூவகை வடிவுகளுக்கும் தம்முள் வேற்றுமை இல்லை. சிவபரம்பொருள் அவ்வாற்றல்களில் பொருந்திச் செய்யும் தொழில் வேறுபாட்டாலேயே இத்திருமேனிகளுக்கு வடிவு வேறுபாடு சொல்லப்படும். அருவுருவத் திருமேனி கொள்ளும் சதாசிவர் தமது கிழக்கு நோக்கிய (தற்புருடம்) முகத்தால் இருக்கினையும், தெற்கு நோக்கிய (அகோரம்) முகத்தால் யசுரினையும், மேற்கு நோக்கிய (வாமதேவம்) முகத்தால் சாமத்தையும், வடக்கு நோக்கிய (சத்தியோசாதம்) முகத்தால் அதர்வணத்தையும், மேல் நோக்கிய (ஈசானம்) முகத்தால் காமிகம் முதலிய இருபத்தெட்டு ஆகமங்களையும் அருளினர். அவற்றினின்றும் புராண சாத்திரங்கள் தோன்றின. உச்சிமேலிருக்கும் மேல்நோக்கிய முகம் இளஞ்சிறாரின் முகம் போன்றதாய்த், தூய பளிங்கின் ஒளியை உடைத்தாய் இருக்கும்

என்றும், கிழக்கு நோக்கிய முகம் இளைஞர்ச்சூரிய முகம் போன்றதாய்க் கோங்கம் பூவின் நிறம் வாய்ந்திருக்கும் என்றும், தெற்கு நோக்கிய முகம் கண்டாரை அச்சுறுத்தும் தகையதாய்க், கீழே தொங்கும் தாடியையும் வெளித்தோன்றும் பற்களையும் உடையதாய்க், கருத் ததாய், முதியோர் முகம் போன்றிருக்கும் என்றும், மேற்கு நோக்கிய முகம் பெண்களின் முகம் போன்றதாய் வெட்சிப் பூவின் நிறம் வாய்ந் திருக்கும் என்றும், வடக்கு நோக்கிய முகம் அரசர் முகத்தை ஒத்த தாய்ப், பால் போன்று வெண்ணிறமாய் இருக்கும் என்றும் கூறுவர். எனினும் திருமூலர் 28 ஆகமங்களையும், இறைவன் தன் ஐம்முகங் களால் 28 பேருக்கு அருளினர் என்றும், கேட்ட அவர்கள் தம் பின்னோருக்கு உணர்த்திய வகையில் அறுபத்தறுவர் ஆவர் என்றும் கூறுவர். காமிகம் முதலிய பத்து ஆகமங்களையும், இறைவனிட மிருந்து கேட்டோர் பிரணவர், சுதாக்கியர், சுதீத்தர், காரணர், சுசிவர், ஈசர், சூக்குமர், காலர், அம்பு, தேசேசம் என்போர். இவர்கள் ஒவ்வொருவரிடமும் இவ்விருவர் கேட்டனர். அவர்கள் திரிகலர், அரர்; பசுமர், விபு; கோபதி – அம்பிகை; சருவருத் திரர், பிரசேசர்; சிவர், அச்சுதர்; திரிமூர்த்தி, உதாசனர்; வைச்சிரவணர், பிரபஞ்சனர்; வீமர், தருமர்; உக்கிரர், ஆதித்தர்; விக்கினேசர், சகி என்போர். இவ்வகையில் முதல் பத்து ஆகமங் களையும் கேட்டோர் முப்பது பேராவர். ஏனைப்பதினெட்டு ஆகமங் களையும் கேட்டோர் அனுதிருத்திரர், தசாகுணர், நிதனேசர், வியோமர், தேசர், பிரமேசர், சிவர், சருவோத்தமர், அனந்தர், பிரசாந்தர், சூலி, ஆலயேசர், விந்து, சிவநிட்டர், சோமதேவர், சிதேவி, தேவவிபு, சிவர் என்போர். இவர் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொருவர் கேட்டனர். அவர் பரமேசர், பார்ப்பதி, பதுமபூ, உதாசனர், பிரசாபதி, நந்திகேசர், மகாதேவர், வீரபத்திரர், பிர கற்பதி, ததீசி, கவசர், இலளிதர், சண்டேசர், அசம்பாதர், நிருசங்கர், உசனர், சப்வர்த்தர், மகாகாளர் என்போர். இவ்வகையில் எஞ்சிய பதினெட்டு ஆகமங்களையும் கேட்டோர் முப்பத்தறுவர் ஆவர். இதனையே "அஞ்சனமேனி அரிவையோர் பாகத்தன், அஞ்சோடு இருபத்து மூன்றுள ஆகமம், அஞ்சலி கூப்பி அறுபத்தறுவரும், அஞ்சாம் முகத்தில் அரும்பொருள் கேட்டதே" எனத்திருமூலர் அருளினர்.

சுத்தமாயா புவனத்தில் உள்ள இவ்வறுபத்தறுவருக்கும் கூறிய இவ்வாகமங்களையே மகேந்திர மலையில் சுவடிகளாக்கி வெளிப் படுத்தினர் என மணிவாசகர் கூறுவர். "மன்னு மாமலை மகேந்திர

மதனில் சொன்ன ஆகமம் தோற்று வித்தருளியும்'' என்பது அடிகள் வாக்கு. மற்று இவ்வாகமங்களையே இறைவன் ஐந்து முனிவர்கள் வழி இந்நில உலகில் பரவ அருளினன் என்றும் அடிகள் கூறுவர். கௌசிகமுனிவருக்கு இறைவன் தன் வடக்கு நோக்கிய முகத்தால் காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம் என்னும் ஐந்து ஆகமங்களை அருளினன். காசிபமுனிவருக்கு மேற்கு நோக்கிய முகத்தால் தீர்த்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிர பேதம் என்னும் ஐந்து ஆகமங்களை அருளினன். பாரத்து வாச முனிவருக்குத் தெற்கு நோக்கிய முகத்தால் விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம் என்னும் ஐந்து ஆகமங்களை யும் அருளினன். கௌசிகமுனிவருக்குக் கிழக்கு நோக்கிய முகத்தால் இரௌரவம், மகுடம், விமலம், சந்திர ஞானம், முகவிம்பம் என்னும் ஐந்து ஆகமங்களையும் அருளினன். அகத்திய முனிவருக்கு மேல் நோக்கிய முகத்தால் புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சருவோத்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் எட்டு ஆகமங்களையும் அருளினன். ''மற்றவை தம்மை மகேந்திர மிருந்து, உற்றவைம் முகங்களால் பணித்தருளியும்'' என அடிகள் அருளுவதால் இவ்வுண்மை விளங்கும். இவை சொல்லுலகாம். அறிவாற்றல் சுத்தமாயையைப் பொருந்துவதால் நாதமும், தொழி லாற்றல் பொருந்துவதால் விந்துவும், அவ்விருவகை ஆற்றலும் ஒப்பப் பொருந்துவதால் சாதாக்கியமும், அறிவு குறைந்து செய லாற்றல் மிகுந்து பொருந்துதலால் ஈசுவர தத்துவமும், அறிவாற்றல் மிகுந்து செயலாற்றல் குறைந்து பொருந்துதலால் சுத்த வித்தையும் தோன்றும். ஈசுவர தத்துவத்தைப் பொருந்தி நிற்கும் மகேசுவரர் அனந்ததேவரை நிலைக்களனுகக் கொண்டு அவர் வாயிலாக அசுத்த மாயையில் பொருந்தும் உடல் கருவி உலகு நுகர்வுகளை உயிர்களின் வினைக்கீடாகப் படைத்து அளிப்பர். அனந்தர் சிகண்டரை நிலைக் களனுகக் கொண்டு பிரகிருதி மாயையில் பொருந்தும் உடல் கருவி உலகு நுகர்வுகளைப் படைத்து அளிப்பர். இவை பொருள் உலகாம். இவ்விருவுலகையும் தோற்றுவிக்கும் திருமேனி அருவுருவும் உருவும் ஆகும். ஒடுக்கும் திருமேனி அருவாம். ஐந்தொழில் செய் யுங்கால் செயலாற்றல் மேம்பட்டு நிற்றலின் 'நிறைகிரியை' என்முர். நிஷ்களசகலம் - அருவுருவம். சகளம் - உருவம். நிஷ்களம்- அருவம்.

# திருவிளையாடற் புராணம்

உரை நடை

## 44. இசைவாது வென்ற படலம்

பாடினியிடம் பாண்டியனின் காமக்கிழத்தி பகைகொள்ளல்

வரகுண பாண்டியன் சிவகதி அடைந்தபின் அவனுடைய மகனாகிய இராசராச பாண்டியன் முடி சூட்டிக்கொண்டு பாண்டி நாட்டை நல்ல முறையில் அரசுபுரிந்து வந்தான். அவனுக்குத் தனது மரபில் வந்தவராகிய மனைவியர்கள் பலரும், கணிகையருளளே காமக் கிழத்தியர்கள் பலரும் இருந்தனர். அந்தக் காமக்கிழத்தியருள் ஒருத்தி அவ்வரசனுக்கு உயிர் போன்றவளாய் விளங்கினாள். அவள் இசை பாடும் கல்வித்துறையில் வல்லவள். அவளுக்கும், கூடற்பெருமான் திருமுன் இசைபாடும் பாணபத்திரருடைய மனைவிக்கும் இசைத் துறையிலே பகை மூண்டது. பாண்டியனின் காமக்கிழத்தி அதுபொழுது பாணபத்திரனின் மனைவிக்கு எதிராக ஒரு பாண்மகளைப் பாடவிட்டு இவள் கொண்ட செருக்கினை அடக்கல் வேண்டும் என்று கருதி அதனைப் பாண்டியனுக்குத் தெரிவித்தாள்.

பாண்டியன் ஈழ நாட்டுப் பாடினியை அழைத்தல்

அக் காமக்கிழத்தி கூறும் வண்ணம் நடக்கும் இராசராச பாண்டியன், பாணபத்திரன் மனைவியை இசையில் வெல்லும் தகுதி வாய்ந்த ஒரு பாடினியை ஈழ நாட்டினின்றும் வரவழைத்தான்; அவள் யாழை முதுகிலே தொங்கவிட்டுப் பாடும் மாணவியர் பலர் சூழ வந்து பாண்டியனை வணங்கி ஒரு கின்னரமங்கைபோல ஏழிசைகளையும் இசைத்துப் பாடி நின்றனள். காமக்கிழத்தியால் மேல் வரும் கொடிய பழியினை நோக்காத பாண்டியன் ஈழத்துப் பாடினியை நோக்கி, ''விறலியே ! நீ நாளைக்குப் பாணபத்திரன் மனைவியை எம் முன் பாடுவதற்கு அழைப்பாயாக; அதற்கு அவள் உன்னோடு பாட ஆற்றாது மறுப்பினும், யாம் அவள் சார்பில் நின்று உன்னைத்தடுத்தாலும் நீ அவளை விடாது தொடர்ந்து அவள் மனம் நாணமுற வஞ்சினமிட்டுப் 'போகாதே! நில்' என்று தடுத்துக் கொள்'' என்று கூறி, வேண்டுவன நல்கி, ''இருப்பிடஞ் சென்று நாளை வரக்கடவாய்'' என்று அனுப்பினான்.

பாணடியன் பாணபத்திரன் மனைவியை அழைத்தல்

பின்பு பாண்டியன் பாணபத்திரனுடைய மனைக்கிழத்தியாகிய பாடினியைத் தம்முன் அழைப்பித்து உள்ளொன்றும் புறமொன்று

மாக எண்ணிக்கொண்டு, ''பாடினியே! இசைவல்லாள் ஒருத்தி தன்னை நன்கு மதித்துக்கொண்டு 'இங்கு என்னேடு இசைபாட வல்லவர் எவரேனும் உண்டோ' என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கின்றனள்; நீ அவளுடன் ஒப்பாக நின்று பாடவல்லையோ? கூறுவாயாக'' என்று வினவினன். அதற்கு அவள், ''அரசே! அடியேனுக்குச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளும் கற்பும் இருத்தலினலே அவளோடு பாடி வெல்வேன்; ஒருபோதும் தோல்வியினல் வருந்தி வாட்டமுறேன்'' என்ருள். பாண்டியன் அவளையும், ''நாளை வா ; போ'' என்று அனுப்பிவிட்டான்.

ஈழப் பாடினிக்கும் பத்திரன்பாடினிக்கும் வாக்கு வாதம்

மறுநாள் இராசராச பாண்டியன் அவ்விருவரையும் தன் அவையின்கண் அழைப்பித்து, ஒருவருக்கொருவர் நேரில் இருக்குமாறு செய்து அவர்கள் கற்ற ஏழிசைகளையும் பாடுமாறு ஏவிக் கேட்பதற்கு முன்னரே, மரக்கலத்தினின்றும் வந்த ஈழ நாட்டுப் பாடினி பாணபத்திரன் மனைவியாகிய பாடினியை இகழ்ந்து பேசி, ''இசைப் பாடலிலே உள்ள குற்றங்கள் எத்தனை? குணங்கள் எத்தனை? யாழுக்குத் தெய்வம் யாது? உயிரெழுத்துக்கு மாத்திரை எத்தனை? மெயயெழுத்துக்கு மாத்திரை எத்தனை? உயிர்மெய்யெழுத்துக்கு மாத்திரை எத்தனை? இக் கேள்விகளுக்கு முதலில் விடை கூறிவிட்டுப் பின்பு நீ என்னேடு பாடுவாயாக; இல்லையேல் உனக்கு வசை'' என்ருள்.

கற்பிற் சிறந்த பாணபத்திரனின் மனைவி, ''பூங்குழலாய்! கடல் கடந்து வந்துள்ள நின் கல்விப் பெருமையினையும், வாதத்தின்மேற் சென்ற ஊக்கத்தின் பெருமையினையும், பலரும் விரும்புகின்ற பெண்ணலத்தின் செருக்கினையும், பாண்டியனது அவையினுள்ளார் அறிந்துகொள்ளுமாறு உனவாயினைத் திறந்து காட்ட வேண்டாவோ? நான் உன்னேடு இசைவாது செய்யும் சண்டைக்கு எதிரன்றிக் கொடிய வாயினைத் திறந்து இகழும் சண்டைக்கு எதிரல்லேன்; உன்னைப்போல மானத்தை விற்றுப் பிழைக்கும் பெண்களே அதற்கு எதிராவர்'' என்று கூறினள். அப்போது பாண்டியன் அவர்கள் இருவரையும் விலக்குகின்றவனைப் போல் நடித்து எதிர்நின்று தடுத்து, ''பெண்களே! நீவிர் வீண்பேச்சை ஒழித்துப் பாடுவீர்களாக; தோற்றவர் வென்றவருக்கு அடிமையாய் விடுவதே சபதம்'' என்று கூறி இருவருக்கும் மானம் உண்டாக்கினன்.

முதனள் பாண்டியன் முன் இசைப் போட்டி

முன்பு ஈழ நாட்டு விறலி யாழினை இடத்தோளில் தழுவிக்குரல் என்னும் நரம்பின் வழியே முகிழ்த்த விரல் சென்று தாக்கப் பெருமிதப்

புன்னகை உள்ளேகிடந்து சிறிது தோன்ற ஏழிசையினைப் பாண்டி மன்னது செவிகளில் அவன் காமக்கிழத்தியின் மழலை மொழியாகிய இனிய அமுதம்போல வார்த்தாள். பாணபத்திரன் மனைவியாகிய பாடினியும் யாழினை எடுத்து, மாடகத்தை முறுக்கிக் கட்டமைந்த நரம்பினைத் தாக்கி இசையில் சிறந்த கந்தருவர்களும் இரு செவி களிலும் கேட்டு நாணுறும்படி மெல்லிய விரல் தடவும் ஓசையின் வழியே நாவால் விளைக்கும் இசையமுதத்தைப் பலர் செவிகளிலும் நிரப்பினாள். அரசனது மனக் கருத்தை அறியாத அவையினர் அனை வரும் பாணபத்திரன் மனைவியின் பாடலை மெச்சிக் கொண்டா டினார்கள், ஆனால், பாண்டியனோ ஈழ நாட்டுப் பாடினியின் பாடலைப் பாராட்டினான். உடனே மன்னனின் உள்ளத்தை அறிந்த அவை யினரும் பாண்டியன் புகழ்ந்த வண்ணமே அவ்வீழப் பாடினியின் பாடலையே புகழ்ந்தனர். இறைவனது திருவருளைப் பெற்று மண், பெண், பொன் என்னும் மூவகை [1] ஆசைகளையும் துறந்தவர்களா யினும் மன்னவன் சொன்னவாறே சொல்வது வழக்காறு அல்லவா?

முன்னவன் அருளைப் பெற்ற மும்மையும் துறந்தா ரேனும்
மன்னவன் சொன்ன வாறே சொல்வது வழக்கா(று) அன்றே!

காமக்கிழத்தியின் மையலாகிய புதிய மதுவினைப் பருகித் தீது நன்று அறியாத பாண்டியன், அவையிலுள்ளாரை நோக்கி, ''இவ்விசை வாதின் முடிவு இன்று ஒரேநாளில் தேர்ந்து அறியத் தக்கதோ?'' என்று கூறி விறலியர் இருவரையும், ''இருக்கைக்குப் போவீராக'' என்று விடுத்தான்.

பாணபத்திரன் மனைவியின் வருத்தம்

ஈழத்துப் பாடினி தன்னைச் சூழ்ந்த மகளிர் கூட்டம் புகழத் தன் இருப்பிடத்தை வந்து அடைந்தாள்; இராசராச பாண்டியன் தன் பாட்டினை வியந்ததனையே ஒரு புகழ்ச்சியாகக் கருதி இறுமாப்புக் கொண்டு பெருங்களிப்படைந்து மலர்ப் படுக்கையின்மேல் கவலை யின்றி இனிது இருந்தாள். பாணபத்திரன் மனைவியோ மனக் கலக்கம் மிகுந்தவளாய்ச் சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை அடைந்து வணங்கி வாட்டமுற்றுக் கண்ணீர் சொரிய ஒதுங்கி

---

1. இங்கு, காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றை யேனும், மனம் வாக்குக் காயம் என்ற மூன்றால் வரும் பாவங்களை யேனும் கொள்ளலாம்.

நின்று, ''சுந்தரபாண்டியனாகி நிலவுலகைச் செங்கோலோச்சி ஆட்சி புரிந்தருளிய அரசே! இரசாராசபாண்டியன் ஓர வழக்குப் பேசுவானா யினன்; அவன் கருத்துக்கிசைய அவையினர் அனைவரும் அத்தன் மையராயினர்; ஐயனே! இனி நடுநிலைமை தூக்கிப் பேசுவார் யாவர்? தேவரீர் திருவருள் சுரந்து தமியேனுடைய துன்பத்தினைப் போக்கி யருள வேண்டும்'' என்று விண்ணப்பஞ் செய்தாள். அப்பொழுது ஆகாயத்தினின்றும், ''பெண்ணே! நாளைக்கு நீயே வெல்லும்படி அருள் செய்வோம்: நீ அஞ்சற்க'' என்று ஓரசரீரி வாக்குத் தோன் றிற்று. அதனைக் கேட்டுப் பாணபத்திரன் மனைவி தன் இல்லிற் சென்று மகிழ்வுடன் இருந்தாள்.

இரண்டாம் நாள் பாண்டியன் முன் இசைப் போட்டி

பாண்டியன் அன்று போலவே மற்றைய நாளும் அவ்விருவிறலி களையும் அழைப்பித்து அவர்கள் பாடலைக்கேட்டு முதனாட் சொல்லிய படியே செல்ல அவையினரும் அப்படியே கூறினார்கள். அதனைக் கேட்டு மனம் புழுங்கி நின்ற பாணபத்திரன் மனைவி பாண்டியனை நோக்கி, ''பாண்டியருள் ஆண் சிங்கம் போன்றவனே! உலகில் மனு நூலின் வழியே செங்கோலோச்சும் மன்னவர் ஏறே! நீர் வார வழக்குப் பேசியதனாலே அவையிலுள்ளாரும் அப்படியே சொல்லத் துணிந்தனர். ஆதலின், தராசின் நாப்போலும் நடுநிலைமையுள்ள சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று பாடுகிறோம். அங்கே எங்கள் இருவரின பாடலையும் கேட்டு யாரேனும் ஒருவர் மனந் துணிந்து 'இவள் வென்றாள்' என்றால் போதும்'' என்று கூறினாள். பாண்டியன் ''அங்ஙனமே நீங்கள் செய்யுங்கள்; செய்யுங்கள்'' என்றான். அவை கலைந்தது. விறலியர் இருவரும் தத்தம் இல்லங் களுக்குச் சென்று தங்கினர்.

கூடற்பெருமான் திருமுன் விறலியர் இருவரும் பாடுதல்

மறுநாள் பாண்டியன் அமைச்சர்களும், இசையின் குற்றங்களை யும் குணங்களையும் பகுத்து உணர்ந்த கீத ஞானம், இலக்கிய ஞானம். சுருதி ஞானம், தாள ஞானம் என்னும் நால்வகை ஞானம் நிறைந்த இசைநூற் புலவர்களும் சூழச் சோமசுந்தரக் கடவுள் சந்நிதியிலே போய் இருந்துகொண்டு விறலியர் இருவரையும் அழைத்து வரும்படி ஏவலர்களை விடுத்தான். ஏவலர்கள் விரைந்தோடி மன்னன் கட்டளை யைக் கூறிப் பாடினிகளை அழைத்தனர். ஈழ நாட்டுப் பாடினி, ''இன்று பாணபத்திரன் மனைவி வந்து எனக்கு அடிமையாய் விடு

வாள்: இதற்கு ஒரு சந்தேகமும் இல்லை'' என்று சுருதிக் கொடுஞ் செருக்கோடும் விரைவாக வந்தனள். கற்பும், கல்வி நிறையும், இறைவன் திருவடியிடத்து வைத்த அன்பும் சிறந்து விளங்கப் பாண பத்திரன் மனைவி மெல்ல வந்தனள். சோமசுந்தரக் கடவுளும் இசை நூலில் உணர்வுமிக்க புலவர்போல, முத்து மாலையோடு தோளணி முதலிய பல அணிகளைத்தரித்துப் புலவர் குழுவின் நடுவில் வந்து எழுந்தருளியிருந்தார்.

அப்போது அச் சபையிலே ஈழ நாட்டுப் பாடினி முதலில் வந்து [1]ஏத்திசை பாடினுள். சபையினில் வீற்றிருந்த முதியோர்கள் மனம் விரும்பி ஒன்றும் கூறுதிருந்தனர். பின்பு பாணபத்திரன் மனைவி வீணையை இடத்தோளில் ஏந்திய வண்ணம் கலைமகள் இருந்து பாடும் பதுமாசனத்திலே தானும் இருந்து யாழ் நரம்பினை விரலினுல் தாக்கித் தடவி, இனிய இசையினை ஆராய்ந்து எழுப்பிப் பாடுவா ளாயினள்.

குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்(கு) இமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய்; மதுரைப் பரமேட்டி!
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலை கொண்(டு)
இடங்கள் தோறும் இரப்பாயென்(று) ஏசு வார்க்கென் பேசுவனே.

தேனுர் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே; மதுரை நம்பரனே!
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
ஆனுய் என்று பிறர்பழித்தால் அடியேன் விடைஏ(து) அறைவேனே.

வரத ஞகி எவ்வுயிர்க்கும் மாயா விருத்தி வலியடக்கிச்
சரத மான வீட்டின்பந் தருவாய், மதுரைத் தனிமுதலே!
சரத மான வீட்டின்பந் தருவாய் வீடு பெறுவார் போல்
விரத யோக நிலையடைந்தாய் என்பார்க்(கு) என்நான் விளம்புவனே.

இங்ஙனம் பாணபத்திரன் மனைவி மதுரைப் பிரானுகிய சோம சுந்தரக் கடவுளைக் [2]கருதிய இசைப் பாட்டினுல் மனங்கனிந்து பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, கையூழ், விளையாட்டு, குறும்போக்கு என்னும் முதற்றெழில் எட்டும், வார்தல்,

---

1 இதனை 'வேத்திசை' என்றுங் கூறுவர்.
2. கருதிய இசைப் பாட்டு. இது 'பெருந்தேவபாணி' ஆகும்.

வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை என்னும் இசைக் கரணம் எட்டும் பொருந்திய யாழிசை யோடு நாவிசை அழநத்தை மண்ணுலகத்தவர் செவிக்கேயன்றி வானவர் செவிக்கும் வார்த்தாள். இடைகலை, பிங்கலைகளின் இயக்கத்தைத் தடுத்து, மூலாதாரத்தினின்றுங் காற்றினை எழுப்பிச் சுழுமுனையின் தொழிலால் பிரமரந்திரம் வரை நடைபெற இசைக் கும் [1] உள்ளாள கீதத்தினைக் கழுத்து வீங்காமலும், கண் இமையாமலும், பல் வெளிப்படாமலும், புருவம் நிமிராமலும், கபாலந் துடியா மலும் பாடினள். அவ்விசையினைக் கேட்டு அனைவரும் பெருமகிழ்ச்சி யடைந்தனர்.

பாணபத்திரன் மனைவி வெற்றி பெறுதல்

கன்னித் தமிழ் நாடனாகிய பாண்டியன் கைதவன் என்னும் தனது பெயரின் காரணத்தை எல்லோருக்கும் அறிவிப்பவனைப் போலத் தான் இசை நூல் வல்லனாயிருந்தும் முன் போலவே முடிவு சொல்லு வதற்கு மனந் துணிகின்றவன் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் மனக்கோட்டம் நீங்கிவிட நடுநிலைமை வகித்து, இருவர் இசை யினையும் சீர்தூக்கிப் பார்த்து, ''பாணபத்திரன் மனைவியே வென்றனள்'' என்றான். அப்படியே சபையாரெல்லோரும் கூறினர். பின்பு பாண்டியன், ''வஞ்சனை மிகுந்த ஈழ நாட்டுப் பாடினியின் கழுத்தில் பாணபத்திரன் மனைவியை இருத்துக'' என்று ஏவ, ஏவல் மகளிர் அங்ஙனே இருத்துவித்தனர். அப்போது உமாதேவியாரின் இடப்பாகத்தை மறைத்து மானிட வடிவம் தாங்கிப் புலவராய் வந்து எழுந்தருளியிருந்த சோமசுந்தரக் கடவுள், ''இஃது அற்புதம்! இஃது அற்புதம்!'' என்று சொல்லிக் கொண்டு அவையிலுள்ளோர் அனைவருங் காண மின்னலைப்போல மறைந்தருளினார். அதுகண்ட யாவரும் வியப் புற்று நின்றனர். பாண்டியன் பயந்து நடுங்கினான்.

பாண்டியன் பாடினிகளுக்குப் பரிசு வழங்கல்

''இது சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்'' என்று தெளிந்த யாவரும் சிவபெருமானின் திருவருள் திறத்தையும், அடியாரின் அன்பையும் சீர் தூக்கிப் புகழ்ந்து தங்கள் கண்களி

---

1. இந்த உள்ளாள கீதம் மேற்கூறிய இலக்கணத்தோடு கந்தருவரால் பாடப்படுவது;

னின்றும் ஆனந்த அருவி பெருக்கெடுக்கப் பேரின்பக் கடலுள் அமிழ்ந்தனர். பாண்டியன் ஈழப் பாடினியின் தோளின் மேல்ஏறி யிருந்த பாணபத்திரன் மனைவியை இறக்குவித்து முற்பட அவளுககு முத்து மாலைகளையும், மணிக் கலன்களையும், ஆடைகளையும், வரிசை யாகக் கொடுத்தான். பின்பு [1]ஈழப் பாடினிக்கும் அவள் மனம் மகிழும் வண்ணம் சில வரிசைகளை அளித்தான்.

ரண்டியன் சோமசுந்தரக் கடவுளை வழிபடல்

அதன்பின்பு, இராசராச பாண்டியன் சபையில் வந்து அனைவ ரோடும் ஒருங்கு எழுந்தருளியிருந்து விண்ணிழி விமானத்தின்கண் புகுந்திருந்த பெரும் புலவராகிய சோமசுந்தரக் கடவுளுக்கும் அரிய அணிகலன் முதலியவற்றை அளித்து வழிபட்டு, ''அரசர்களுடைய வலிகளெல்லாம் தெய்வங்களின் வலிக்கு முன் நில்லா; அத் தெய்வங்களின் வலிக ளெல்லாம் சிவபெருமானின் வலிக்கு முன் நில்லா'' என்று ஆன்றோர் பலரும் கூறுவதெல்லாம் இப் பாணபத்திரன் மனைவி வாயிலாகக் காணப் பட்டது என்று ஆச்சரியமடைந்து,

மன்னவர் வலிகள் எல்லாம் தெய்வத்தின் வலிமுன் நில்லா;
அன்னமா தெய்வஞ் செய்யும் வலியெலாம் அரண்மூன்(று) அட்ட
முன்னவன் வலிமுன் நில்லா எனப்பலர் மொழிவ தெல்லாம்
இன்னபாண் மகளிற் காணப் பட்டதென்(று) இறும்பூ(து) எய்தா.

சாமசுந்தரக் கடவுளை வலஞ் செய்து வணங்கி விடை பெற்றுக் கொண்டு தன் மாளிகை அடைந்தான்.

பின்னர் இராசராச பாண்டியன் சேமநிதி பெற்றவனைப் போலச் [2]சுகுண பாண்டியன் என்னும் மைந்தனைப் பெற்று மகிழ்ந்து வாழ்ந் திருந்தான்.

செய்யுள்—44

ஆகச் செய்யுள்—2192

---

1. இவள் தன்னால் வருவிக்கப்பட்டவள் ஆதலால், தோல்வி யுற்ற அவட்கும் வரிசை அளித்தனன் என்க.

2. சுகுணன்-நற்குணமுடையவன்.

# 45. பன்றிக்குட்டிக்கு முலை கொடுத்த படலம்

### குருவிருந்த துறையின் சிறப்பு

சொக்கலிங்கப் பெருமான் எழுந்தருளிய மதுரை மாநகர்க்குத் திறையாக முத்துக்களை வீசும் வையையாற்றின் தெற்கிலே [1]குருவிருந்த துறை என்னும் பெயர்கொண்ட ஒரு பெரிய ஊர் உள்ளது. அவ்வூரிலே தேவ குருவாகிய பிரகஸ்பதி இருந்து சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்தார். சிவபெருமான் அவருக்குப் பல வரங்களைக் கொடுத்துச் 'குருநாதர்' என்னும் பெயருடன் அங்கே திருமாலும் நான்முகனும் போற்ற எழுந்தருளியிருந்தார்.

### சுகலன் புதல்வர்கள் இழிநிலை அடைதல்

அவ்வூரிலே சுகலன் என்னும் பெயருடைய ஒருவேளாளன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி சுகலை என்று சொல்லப்படுவாள். அவள் பன்னிரண்டு புதல்வர்களைப் பெற்றாள். அப்புதல்வர்களைப் [2]பெற்றோர்கள் செல்வச் செருக்கினாலே குற்றங் கண்டபோது நல்வழிப் படுத்தாது மிக்க அன்போடு வளர்த்து வந்தனர். இவ்வாறு வளர்ந்து வரும் நாளில் தாயும் தந்தையும் இறந்துவிட, அப்புதல்வர்கள் வேடர்களோடு கூடிக் கொடிய காட்டில் வந்து வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டார்கள்.

### சுகலன் புதல்வர்கள் தேவகுருவால் சாபம் பெறுதல்

ஒருநாள் சுகலன் புதல்வர்கள் அக்காட்டிலே வெய்யில் புகாத புதலின் கீழ்ச்சென்று ஐம்புலங்களையும் அடக்கித் தவஞ் செய்து கொண்டிருந்த வியாழபகவானைக் கண்டு கைகொட்டிச் சிரித்துக் கல்லையும் பரலையும் வாரி அவர் மேல் எறிந்தார்கள்.

---

1. குருவிருந்த துறை- இவ்வூர் தற்போது மதுரைக்கு மேற்கே சுமார் 15கல் தூரத்தில் உளது என்பர். இக்காலத்து இவ்வூர் 'குருவித் துறை' என வழங்குகிறது.

2. இவர்கள் பாண்டி நாட்டிற்கு அருகிலுள்ள காட்டு நாட்டு வன்னிய வமிசத்தினர் என்றும், வேளாண்மைத் தொழிலையுடையவர் என்றும் நம்பி திருவிளையாடல் கூறுகிறது. [காட்டு நாடு- இது களவேள்வி நாடு எனவும் பெயர் பெறும். வன்னியர்- ஒரு வகைச் சாதியார்.]